PARLE

# என்றும் மறவோம்... வாழ்நாள் வரை

## வாழ்க்கைப் பாதை இதுவே சரி

வாழ்க்கைப் பாதையில் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் ஒரு சோதனையே. எந்தப் பாதையில் செல்வது, எதைத் தவிர்ப்பது: நம்மை வேறுபடுத்தும் அடையாளம் இதுவன்றோ. ஒருவித சுயநலமின்றி எதிர்பார்ப்பின்றி, பிறருக்கு உதவுதல்; பாதையில் செல்கையில், மற்றவர்களின் துயர் நீக்குதல். உண்மையான வாழ்க்கை என்பது இதுதானே. என்றும் மறவோம்... வாழ்நாள் வரை. வாழ்க்கைப் பாதை இதுவே சரி.




வருடக்கணக்காக இந்தியாவின் அனைத்திலும் அதிகமாக விற்பனையாகும் பிஸ்கட் • சுவை மிகுந்தது, உண்மையான சக்தி நிறைந்தது •

everest/95/PPL/110tm



# அம்புலிமாமா

## ஜூன் 1996



## பொருளடக்கம்






**தனிப்பிரதி ரூ.5.00**

**வருட சந்தா ரூ.60.00**




# அம்புலிமாமா

*நிறுவனர்: 'சக்கரபாணி'* *நிர்வாக ஆசிரியர்:* **நாகிரெட்டி**



## வேண்டாம் இந்த விபரீதம்!

மனிதன் வேறொருவனைப் பார்த்து அவனைப் போலச் செய்வது இயல்பு. இளைஞர்களும் சிறுவர்களும் இன்றைய திரைப்படங்களையும் தொலைக்காட்சித் தொடர்களையும் கண்டு அந்தந்த நடிக, நடிகைகள் போல நடந்தும் சண்டைகள் போட்டும் பழகுகிறார்கள். இதனால் எத்தகைய விபரீத விளைவு ஏற்படுகிறது என்பது லக்னௌவில் நடந்த ஒரு சம்பவத்தால் தெரிகிறது.

தொலைக்காட்சியில் ஒரு குளிர்பானத்திற்கான விளம்பரம் காட்டப்பட்டது. அதில் ஒருவன் மாடி மீதிருந்து தெருவில் போகும் லாரிக்குள் குதித்து அதிலிருந்து ஒரு குளிர் பானப் பாட்டிலை எடுத்து ரசித்துக் குடிக்கிறான். இந்த விளம்பரத்தைக் கண்ட ஆறு வயதுச் சிறுவன் ஒருவன் தன் வீட்டு மாடியிலிருந்து தொலைக்காட்சியில் கண்டது போலக் குதித்து விட்டான். பாவம்! கீழே விழுந்த சிறுவன் பலத்த அடிபட்டு இறந்து விட்டான்.

திரைப்படங்களையோ தொலைக்காட்சி நிகழ்ச்சிகளையோ பார்க்கலாம். அவற்றில் நல்லவற்றை ஏற்றுக் கொள்ளுங்கள். பார்த்த எல்லாக் காட்சிகளையும் போலச் செய்ய முயலாமல் எது தேவையோ அதை மட்டும் ஏற்றுக் கொள்ள வேண்டும்.



**மதிமுகம்: 98** **ஜுன் 1996** **புன்னகை: 6**

**தனிப்பிரதி: ரூ.5.00** **வருட சந்தா: ரூ.60.00**



# நமது சந்தாதாரர்களுக்கு
# ஒரு அறிவிப்பும், வேண்டுகோளும்

அருமை நண்பர்களே,

உங்கள் அபிமான பத்திரிகை 'அம்புலிமாமா'விற்கு விரைவில் 50வது ஆண்டு வரப் போகிறது. இச்சமயத்தில் இதில் மாற்றங்கள் செய்யப்பட வேண்டியதில்லை என்றாலும் சில மாறுதல் செய்தே ஆக வேண்டியுள்ளது. **முதலாவது :** காகிதம். நாம் அண்மையில் சில ஆண்டுகளாக இறக்குமதி செய்யப்பட்ட காகிதத்தையே பயன் படுத்தி வருகிறோம். சென்ற சில ஆண்டுகளாக குறிப்பிட்ட அளவில் எமக்கு தேவைக்கு வேண்டிய காகிதத்தை மொத்தமாக அடைவதில் பல சிரமங்களை அனுப வித்து வருகிறோம். காகித விலையும் ஒரே நிலையில் இல்லாமல் நாளுக்கு நாள் உயர்ந்து கொண்டே போய்க் கொண்டிருக்கிறது.

வண்ணப்படங்களுடன் கூடிய இப்பத்திரிகையைத் தயாரித்து அச்சடிப்பதில் மற்ற செலவினங்களும் அதிகரித்துக் கொண்டிருக்கின்றன.

முன்பெல்லாம் சமாளித்தது போல இதுவரை இச்சுமையை நம் வாசகர்களின் மீது சுமத்தாமல் நாமே ஏற்று வந்தோம். ஆனால் இப்போது அச்சுமையின் ஒரு சிறு பகுதியை வாசகர்களுக்கும் பதிர்ந்தளிக்க வேண்டியுள்ளது என்பதை அறிவித்து அவர்களை இதனை ஏற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

**இரண்டாவது :** விலை, 1996 ஜுலை இதழிலிருந்து உங்கள் பத்திரிகையின் விலை ஒரு ரூபாய் கூடுகிறது. இனி இதன் விலை தனிப் பிரதி ரூ 5.00க்கு பதிலாக ரூ 6.00 ஆக இருக்கும். வருட சந்தாவும் ரூ 72.00 ஆகும்.

**மூன்றாவது; அளவு :** பத்திரிகையின் அளவு சற்றுக் கூடும். அதனால் நீங்கள் படித்து ரசிக்க மேலும் விஷயங்கள் அளிக்கப்படுகிறது. இந்த மாறுபட்ட தோற்றத்தோடு உங்கள் பத்திரிகை தன் பழைய உருவிலிருந்து மாறித் தன் பொன் விழா ஆண்டைக் கொண்டாடுகிறது.

நீங்கள் இந்தப் புதிய மாற்றங்களை வரவேற்பீர்களென்றே நம்புகிறோம்.

எங்களது நல்வாழ்த்துக்களை அளிக்கிறோம்.

உங்கள் அன்புள்ள

(பி. விஸ்வநாத ரெட்டி)

வெளியிடுவோர்.

கொதிக்கும் கோடையில் குழந்தைகளை வாட்டுகிறது வெய்யில். அப்போது...


























வெய்யிலையும் தாகத்தையும் தோற்கடித்து விட்டது மில்டன். அதன் பிறகு, பூமியில் குழந்தைகளுக்கு தாகமே ஏற்படவில்லை



இதோ! நாள் முழுவதும் தண்ணீர் ஜில்லென்றே இருக்க ஒரு புதுமையான வழியைக் கண்டுபிடித்து அறிமுகம் செய்கிறது மில்டன். இதிலே டஃப்-பஃப்பின் புரட்சிகரமான பொருட்கள் இன்சுலேட் செய்யப்பட்டுள்ளன. வியப்பூட்டும் வடிவங்களில், அளவுகளில், வண்ணங்களில் மில்டன் கிடைக்கிறது. எனவே, வெய்யிலை வெல்ல மில்டன் பெறுங்கள். ஏனெனில், மில்டனை விட வேறு எதால் இதை சாதிக்க முடியும்!




ஜில் தண்ணி இருக்கும் ஜில்லுன்னு... எப்பவுமே ஜில்லுன்னு

ஒவ்வொரு மில்டன் வாட்டர் பாட்டிலுடன் இரு லேபிள் ஸ்டிக்கர்கள் இலவசம்! முந்துவீர்

Lintas Mp 10 2016 Tm



# பயன் தரும் புகழ்ச்சி

செல்லப்பன் ஒரு வேலையும் செய்யாமல் இருந்து வந்ததால் அவனுடைய பெற்றோரும் சகோதரர்களும் உறவினர்களும் ஊராரும் அவனை உதவாக்கரை என்று கூறி வந்தனர். ஆனால் செல்லப்பன் அவர்கள் சொல்வதைப் பொருட்படுத்தாமல் இருந்து வந்தான்.

ஒருமுறை செல்லப்பனின் தாய் மாமன் நடராஜன் அவன் வீட்டிற்கு வந்தான். எல்லோரும் செல்லப்பனைப் பற்றிக் குறை கூறியது கண்டு அவன் தன் மருமகனை அழைத்து அறிவுரை கூறிக் கடிந்து கொண்டான். அப்போது செல்லப்பன் அவனிடம் ''நான் என்ன தவறு செய்தேன் என்று கூறுங்கள்'' என்று கேட்டான்.

அவனது மாமனும் ''மனிதன்தான் பிழைக்க எதாவது ஒருவேலை செய்து வர வேண்டும். இப்படி எவ்வளவு நாட்களுக்கு இருப்பாய்? உன் தாய் தந்தையர் காலத்திற்குப் பிறகு உனது சகோதரர்கள் உன்னை இப்படியே கவனித்து கொள்வார்களா?'' என்று கேட்க செல்லப்பனும் ''நான் வேலை செய்து பணம் சம்பாதித்துச் சேர்த்து வைத்தால் அதை எந்தத் திருடனாவது கவர்ந்து செல்ல மாட்டான் என்பது என்ன நிச்சயம்? நான் ஞானி. ஞானிகள் எது பற்றியும் கவலைப்பட மாட்டார்கள்'' என்றான்.

அது கேட்டு நடராஜன் ஆச்சரியப்பட்டு ''நீ வாழ்நாளில் எதாவது செய்து காட்டினால்தான் உன் பிறவிப் பயன் தெரியவரும்'' எனவே செல்லப்பனும் ''பிறவிப் பயன் என்றால் என்ன?'' என்று கேட்டான். அவனது மாமனும் ''நீ செய்யும் வேலையால் உன் பெயர் உலகில் என்றென்றும் நிலைத்திருப்பதுதான்'' என்றான்.

செல்லப்பனும் ''அப்படியா? ஆனால் என் தாத்தாவின் பெயரோ

—சிவனார் செல்வன்—

மூப்பாட்டனார் பெயரோ நிலைத் திருக்கவில்லையே! அவர்களைப் பற்றி யாரும் நினைப்பதாகக் கூடத் தெரியவில்லை இவ்வுலகில் உடலைப் போலப் பெயரும் நிலைத்து இருப்பதில்லை. மறைந்தே போகிறது'' என்றான். அவன் மாமாவும் ''அடேயப்பா! நீ எப்படியெல்லாம் பேசுகிறாய்! ஆனால் என்ன பயன்? உன்னை ஒருவன் கூடப் பாராட்டுவது இல்லையே!'' என்றான்.

செல்லப்பனும் ''நீங்கள் நினைப்பது சரியல்ல, பிறவிப் பயனை நான் அடைந்து விட்டேன் இந்த ஊரில் ஆனந்த தீர்த்தர் என்ற மகான் இருக்கிறார் அவர் என்னைப் பார்க்கும் போதெல்லாம் என்னைப் புகழ்ந்து கொண்டுதான் இருக்கிறார்'' என்றான். அதைக் கேட்டு அவனது மாமா ''அப்படி யாரப்பா உன்னைப் புகழ்பவர்?'' எனக் கேட்கவே செல்லப்பனும் ''இன்று மாலை கால்வாய்க் கரையிலுள்ள தோப்பிற்கு வாருங்கள். அவர் என்னை எப்படிப் புகழ்கிறார் என்று கேட்கலாம்'' என்றான்.

அன்று மாலை நடராஜன் கால்வாய்க்கரை தோப்பிற்குச் சென்றான். அப்போது செல்லப்பன் ஓரிடத்தில் அமர்ந்து தனக்குத்தானே ஏதோ கூறிக் கொண்டிருப்பதையும் அவனருகே ஆனந்ததீர்த்தர் வந்து நிற்பதையும் அவன் கண்டான். செல்லப்பன் சட்டெனஎழுந்து அவரை வணங்கினான். அவரும் அவனை உட்காரச் சொல்



லவே, அவனோ ''தங்களைப் போன்ற பெரியவர்கள் நின்று கொண்டிருக்கும் போது நான் உட்கார்வது முறையல்ல'' என்றான்.

அப்போது அவர் ''பெரியவர் என்று பார்த்தால் உன்னைவிடப் பெரிய மனிதர் யாருமே இல்லை. நீ மாபெரும் ஞானி. உன் போன்ற ஞானியாக வேண்டுமென்றால் யோகிகளுக்குக் கூட நூறு வருடங்கள் பிடிக்கும். நீ எங்களிடையே இருந்து வருவதால் உன் உண்மையான மதிப்பு யாருக்கும் தெரியவில்லை. ஞானிகளிடையே நீ இருந்தால் உன் மதிப்பும் பெருமையும் வெளியுலகிற்குத் தெரியும். வேதங்களைப் படிப்பது வேறு. அவற்றைப் புரிந்து கொள்வது வேறு. நீயோ

வேதங்களை நன்கு படித்துப் புரிந்து கொண்டிருக்கிறாய்'' என்றார்.

அப்போது செல்லப்பன் ''இதெல்லாம் உங்கள் தயவால்தான். இதில் என் பங்கிற்கு எதுவும் இல்லை'' என்றான். ஆனந்த தீர்த்தரும் ''உன்னோடு வேதாந்த விஷயங்களில் சர்ச்சை புரிய வேண்டுமென்ற ஆசை இருக்கிறது. ஆனால் எனக்குத்தான் நேரமே இல்லை. எப்போது கடவுளின் அருளால் அந்த வாய்ப்பு கிடைக்குமோ? பார்க்கலாம்'' என்று கூறிவிட்டு அங்கிருந்து சென்றார்.

இதையெல்லாம் பார்த்தும் கேட்டும் கொண்டும் நின்ற நடராஜன் ஆனந்த தீர்த்தர் போன பின் செல்லப்பன் இருக்கும் இடத்திற்கு வந்தான் அவன் ''செல்லப்பா! என்ன மாய மந்திரம் போட்டு அவரை மயக்கினாய்? உன்னை ஒரேயடியாகப் புகழ்கிறாரே!'' என்று கேட்டான்.

செல்லப்பனும் ''மாமா! இந்த ஊரே இவரைப் புகழ்கிறது. அப்படிப் பட்டவர் என்னைப் புகழ்ந்தால் நான் உயர்ந்தவன் தானே. சந்தேகம் இருந்தால் ஊராரிடம் விசாரித்துப் பாருங்கள்'' என்றான். நடராஜனும் செல்லப்பன் கூறியதை நம்பாமல் ஊரில் பலரிடம் ஆனந்த தீர்த்தரைப் பற்றி விசாரித்தான். ஒரு வியாபாரி அவரைப் பொருளாதார நிபுணர் எனக் கூறினான். ஒரு பண்டிதரோ அவரை மாபெரும் பண்டிதர் என்று கூறினார். ஒரு ஓவியர் அவரை சிறந்த ஓவியர் எனப் புகழ்ந்தார். ஒரு பாடகரோ அவரை இசைமேதை என்றார். ஆனந்த தீர்த்தர்



சகலகலா வல்லவர் என நடராஜன் அறிந்து கொண்டான்.

இப்படிப்பட்டவர் ஏன் செல்லப் பனைப் புகழ்கிறார் என்பதுதான் நட ராஜனுக்குப் புரியவில்லை. அவரைப் பற்றி நடராஜன் வீட்டிற்குப் போய்க் கேட்கவே செல்லப்பன் தந்தையும் ''தன் எதிரில் இருப்பவர் எப்படிப் பட்டவராயினும் அவரை ஒருவர் புகழ்ந்து பாராட்டினால் அவர் மிகவும் உயர்ந்தவரே. செல்லப்பனை அவர் புகழ்ந்து பாராட்டுவதால் அவர்தான் உயர்கிறாரே யொழிய செல்லப்பன் உயர்ந்து விடுவதில்லை'' என்றான்.

செல்லப்பனின் தாயாரோ ''தம்பீ! அவர் நம் செல்லப்பனிடம் ஏதோ ஒரு அபூர்வ சக்தியைக்கண்டே அவனைப் புகழ்கிறார். அந்த சக்தி என்ன என்று கண்டறியும்படி நான் இவர்களிடம் சொன்னால் இவர்கள் என் பேச்சைக் கேட்பதே இல்லை. நீயாவது அந்த மகானைக் கண்டு நம் செல்லப்பனி டம் உள்ள அபூர்வ சக்தி என்ன என்று தெரிந்து கொண்டு வா'' என்று வேண் டினாள்.

நடராஜனும் மறுநாள் அவரைக் கண்டு அவரைப் புகழ்ந்து விட்டுத் தான் யாரென்பதையும் கூறினான். ஆனந்த தீர்த்தரும் அவன் கூறியதை யெல்லாம் கேட்டுவிட்டு ''மிகவும் சந்தோஷம். தங்களுக்கு என்ன உதவி வேண்டுமென்று கூறினால் அதை மகிழ்ச்சியுடன் செய்வேன்'' என்று கூறினார். நடராஜனும் தன் மருமகன் செல்லப்பனைப் பற்றிக் கூறி ''அவனிடத்தில் நீங்கள் என்ன அபூர்வ





புகழ்வது தவறல்ல. அதனால் புகழப் பட்டவனுக்கு நன்மைதான், கெடுதலே அல்ல'' என்று சிரித்துக் கொண்டே கூறினார். அப்போது நடராஜன்! ''ஒன்றுமே அறியாதவனை மகா ஞானி எனப் புகழ்வதால் அவனது வாழ்வு பாழாகி விடாதா?'' என்று கேட்டான். அவரும் ''ஆகாது. எப்படிப்பட்டவனுக்கும் வெட்கம், மானம் என்பது கொஞ்சமாவது இருக்கும். நான் ஒருவேளை ஞானி என்று புகழ்ந்தால் அவன் உண்மையிலேயே ஞானியாக இருந்தால் வெட்கப்பட்டு நாணி கோணி நிற்பான். உண்மையில் அவன் ஞானியாக இராவிட்டால் நான் புகழ்ந்த பிறகாவது தான் ஞானியாக ஆக முயற்சி செய்வான்? என்றார்.

சக்தியைக் கண்டீர்கள்?'' என்று கேட்டான்.

ஆனந்த தீர்த்தரும் ''செல்லப்பனா? அவனைப் பற்றி ஒன்றும் தெரியாது யாரையும் புகழ்ந்து பாராட்டுவது என் வழக்கம். அதுதான் காரணமேயன்றி அவனிடம் ஏதோ அபூர்வ சக்தி இருக்கிறது என்பதால் அல்ல'' என்றார். அப்போது நடராஜன் ''எல்லோரையும் புகழ்ந்து பாராட்டுவது உங்கள் பழக்கமா? ஒருவரைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொள்ளாமல் இப்படியெல்லாம் புகழ்வது தவறல்லவா? உங்களைப் போன்றவர்கள் இப்படியெல்லாம் செய்வது சரியா?'' என்று கேட்டான்.

ஆனந்த தீர்த்தரும் ''ஒருவரைப்

அப்போது நடராஜன் ''நீங்கள் புகழ்பவன் வெட்கம் மானம் என்பது பற்றிக் கவலைப்படாதவனாக இருந்தால்?'' என்று கேட்டான். அவரும் ''அப்படி ஒருவன் இருந்தால் அவனால் எனக்கு எவ்வித ஆபத்தும் வராது. இதுவரை என்னை யாரும் கேலி செய்ததும் இல்லை ஏனெனில் நான் பிறரைப் புகழ்ந்தால் அவர்களும் என்னைப் புகழ்கிறார்கள்'' என்றார்.

அது கேட்டு நடராஜன் ''ஐயா! நீங்கள் கூறுவதெல்லாம் சரிதான். ஆனால் என் மருமகன் விஷயத்தில் சற்றுக் கண்டிப்பாக இருக்க வேண்டும்! இல்லாவிட்டால் அவனைப் போன்றவர்கள்தாம் மாபெரும் ஞானிகள் என்று எண்ணிக் கொண்டு விடு

வார்கள். இது மிகவும் மோசமான நிலையாகி விடுமே'' என்றான். ஆனந்த தீர்த்தரும் ''தன்னைப் பற்றி எவன் நன்கு அறிந்து கொள்கிறானோ அவனே ஞானி பிறர் சொல்லி தான் ஒரு ஞானி என எண்ணிக் கொள்பவன் முழு முட்டாள். நான் கூறுவதால் ஒருவனது அறிவை வளர்த்து விடமுடியாது. ஒருவனது முட்டாள்த்தனத்தையும் குறைத்து விட முடியாது'' என்றார்.

நடராஜனும் ''ஒருவனைப் புகழு முன் அவனைப் பற்றி நன்கு தெரிந்து கொள்வது நல்லதுதானே?'' என்று தன் எண்ணத்தைக் கைவிடாமல் தொடர்ந்து கேட்டான். அவரும் ''வேண்டியதில்லை. அதற்காகச்செலவிடும் நேரத்தை நான் பல விஷயங்களைக் கற்கவே பயன்படுத்துவேன். உதவாக்கரைகளைப் பற்றி அறிய ஏன் வீணாக நேரத்தைச் செலவிட வேண்டும்? அதனால்தான் அப்படிப்பட்டவர்களைக் கண்டால் நாலு வார்த்தை புகழ்ந்து கூறிவிட்டு ஒதுங்கிக் கொள்வேன்'' என்றார்.

நடராஜனுக்கு அவனது சந்தேகங்களெல்லாம் தீர்ந்து போயின. அவன் வீட்டிற்குத் திரும்பிப் போய் செல்லப்பனிடம் நடந்ததையெல்லாம் கூறி ''ஆனந்த தீர்த்தரிடமிருந்து நான் எவ்வளவோ கற்றுக் கொண்டேன். ஒரு உதவாக்கரையிடம் பேசி அவனைத் திருத்த முயல்வது வீணான செயல். அவனைப் புகழ்வதால் யாருக்கும் எவ்வித லாபமும் ஏற்பட்டு விடாது. நஷ்டமும் ஏற்பட்டு விடாது. அதனால் இனிமேல் நானும் உன்னை நான்கு வார்த்தைகள் புகழ்ந்து கூறிவிட்டு வேறு எதுவும் சொல்லாமல் இருப்பேன். உன்னைப் போல மகாஞானி இந்த உலகிலேயே இல்லை'' என்று கூறிவிட்டுத் தன் ஊருக்குக் கிளம்பி விட்டான்.

அப்போது செல்லப்பன் தன்னைப் பற்றி எண்ணி வெட்கப்பட்டான். அவனில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. அன்றிலிருந்து ஆனந்த தீர்த்தரைக் காணவும் அவன் முயலவில்லை.''



# JUST RELEASED

The first set of **Chandamama Books,** splendid in their content, illustrations, and production, is now ready.




Rs. 30/-




Rs. 40/-




Rs. 30/-




Rs. 30/-




Rs. 25/-




Rs. 30/-

Discount for members of **Chandamama Young Scholars Club.**

For details, write to :



**CHANDAMAMA BOOKS**
Chandamama Bldgs.
Vadapalani, Madras - 600 026.




# 11

(ட்ராய் போருக்குப் பின் தன் தாய் நாடான இதாகாவுக்குத் திரும்பிவரும் போது பல கஷ்டங்களை ரூபதரன் அனுபவித்தான். வழியில் தன் ஆட்களை எல்லாம் இழந்தான். தனியாகவே அவன் பயணம் செய்ய வேண்டியதாயிற்று. இதாகாவை அடைந்தும் அவனது கஷ்டங்கள் தீரவில்லை. அவனுக்கு புத்திமதி தேவதை உதவி அவன் உருவையே மாற்றியது. அவன் கிழவனாக மாறி இதாகாவில் இருக்கும் போது–)

ட்ராய்ப் போரில் ரூபதரன் இறந்து போய்விட்டான் என்று வதந்தி எங்கும் பரவியது. இதனால் இதாகாவிலும் அதை சுற்றிலுமுள்ள பகுதிகளிலுள்ள அரசகுமாரர்கள் இதாகாவிலுள்ள ரூபதரனின் மாளிகையில் போய்த் தங்கி, ரூபதரனின் மனைவியான பத்மமுகியை எப்படியாவது மணந்து கொள்வது என்று எண்ணினார்கள். அதனால் இதாகாவின் மன்னனாகி விடலாமே என்ற ஆசை தான் அவர்களுக்கு.

தீரமதி அப்போதுதான் அரும்பு மீசை துளிர்த்து வரும் வாலிபன். அவன் குழந்தையாக இருக்கும் போது ரூபதரன் ட்ராய்ப் போருக்குக் கிளம்பிப் போய் விட்டான். அதனால் தீரமதி தன் தந்தையைப் பார்த்ததே இல்லை. ஆனால் தன் தந்தை எப்போது திரும்பி வருவார் என்று அவன் எதிர்பார்த்துக்

காத்திருந்தான். ஆனால் தன் தந்தையைப் பற்றி எந்தத் தகவலும் கிடைக்காதது அவனுக்கு வேதனையாகவே இருந்தது.

அரண்மனையில் கூடி இருந்த அரசகுமாரர்களெல்லாம் தீரமதியைப் புழு போலப் பார்த்தார்கள். ரூபதரனின் ஆடு, மாடு, பன்றிகளைக் கொன்று தின்று வந்தார்கள். குடித்துக் கும்மாளம் போட்டு ஒவ்வொருவனும் பத்மமுகி தன் மனைவிதான் என்று கத்தலானான். இந்த கும்பலை எப்படி அடக்கி விரட்டுவது என்று தீரமதிக்குத் தெரியவில்லை.

பத்மமுகியோ தன் கணவன் திரும்பி வருவான் என்று உறுதியாக நம்பினாள். சோதிடர்கள் வாயிலாக அவள் ரூபதரன் இறக்கவில்லை என்றும் திரும்பி வந்து விடுவான் என்று அறிந்து கொண்டிருந்தாள். எனவே அவள் மறுமணம் செய்து கொள்ள மறுத்தாள். ஆனால் கூடியிருந்த அரசகுமாரர்களோ ரூபதரன் இறந்து விட்டான் எனக்கூறி அவள் தன் மறுமணத்திற்கு இணங்கித்தான் ஆக வேண்டுமென்று வற்புறுத்தினார்கள்.

அவர்களிடமிருந்து தப்பித்துக் கொள்ள பத்மமுகிக்கு வழி தெரிந்தது. அவன் அவர்களிடம் ''என் மாமனாரின் சவத்தின் மீது போர்த்த ஒரு துணியை நெய்தாக வேண்டும். அதை முடித்த பிறகே என் மறுமணம் பற்றி யோசிப்பேன்'' எனக் கூறிவிட்டாள். அரசகுமாரர்களும் அதற்குச் சம்மதித்தனர்.

பத்மமுகி பகலில் துணி நெய்தும்



இரவில் நெய்த துணியைப் பிரித்தும் வந்ததால் துணியின் நெசவு முடிவடையாமலே இருந்தது. இப்படியே மூன்று வருடங்களை அவள் கழித்து விட்டாள். ஆனால் அரசகுமாரர்கள் இந்த ரகசியத்தைக் கண்டுபிடித்து விட்டனர். அதனால் அவர்களது அட்டகாசம் அதிகரித்தது. இதைக்கண்ட தீரமதி பைலாசுக்குப் போய் நவத்யோதனையும், ஸ்பார்ட்டாவிற்குப் போய் பிரதாபனையும் கண்டு ரூபதரனைப் பற்றி விசாரித்துக் கொண்டு திரும்பி வருவது என்று தீர்மானித்து கொண்டான்.

அவன் ''எல்லோருக்கும் பிறகே பிரதாபன் ட்ராய்ப் போரிலிருந்து திரும்பி வந்தவர். அவரைக் கண்டு தன் தந்தை உயிருடன் இருக்கிறாரா'' என்று கேட்கப் போகிறேன். அவர் என் தந்தை இறந்து விட்டதாகக் கூறிவிட்டால் என் தாயின் மறுமணத்திற்கு ஏற்பாடு செய்கிறேன். என் தந்தை உயிருடன் இருந்தால் பிறகு என்ன நடக்கும் என்று கூறுகிறேன். நாளை எல்லோரும் ஊர்ப் பொது இடத்தில் கூடுங்கள். அங்கு என் தீர்மானத்தைக் கூறி உங்களையெல்லாம் என் வீட்டை விட்டுப் போய் விடும்படிக் கூறப் போகிறேன். நீங்களெல்லாம் மரியாதையாகப் போய் விட்டால் சரி, இல்லாவிட்டால் எனக்குத் துணையாக வரும் வாலிபர்களைக் கொண்டு உங்களையெல்லாம் துரத்தி விடுவேன்'' என அங்கு கூடிய அரசகுமாரர்களை எச்சரித்தான்.

தீரமதியின் இந்த திடீர் எச்சரிக்கை அந்த அரசகுமாரர்களுக்கு வியப்பை அளித்தது. மறுநாள் தீரமதி ஊர்ப்



HIN-F3



பொது இடத்தில் கூட்டத்தைக் கூட்டினான். அவன் இரு நாய்களோடு கம்பீரமாக நடந்து கூட்டத்திற்கு வந்தான். போர்வீரனைப் போல வந்த அவனை ஊர்ப் பிரமுகர்கள் வரவேற்று அவனது தந்தை அமரும் ஆசனத்தில் அவனை உட்கார வைத்தார்கள். மற்றவர்களும் தமது ஆசனங்களில் அமர்ந்து கொண்டார்கள்.

தீரமதி மெதுவாக எழுந்து நின்று ''ஐயன்மீர்! இக் கூட்டத்தைக் கூட்டியவன் நான். உங்களிடம் நான் படும் கஷ்டங்களைக் கூறவே உங்களை இங்கு கூடச் சொன்னேன். நான் என் தந்தையை இழந்து தவிப்பது எனக்குள்ள ஒரு துயரம். அவர் உங்களது மன்னராக இருந்ததை நீங்கள் அனைவரும் அறிவீர்கள். எனது மற்றொரு தொல்லை அரசகுமாரர்கள் பலர் என் அரண்மனையில் கூடி என் தாய் அவர்களில் ஒருவரை மறுமணம் செய்து கொள்ள வேண்டும் என்று கட்டாயப் படுத்துவது. அது மட்டுமா? அவர்களது அட்டகாசங்கள் சகிக்க முடியவில்லை. வீட்டிலுள்ளதை எல்லாம் சூறையாடுகிறார்கள். நிலைமை இப்படியே தொடர்ந்தால் நான் எல்லாவற்றையும் இழந்து ஓட்டாண்டி ஆகிவிடுவேன். இப்படிச் செய்பவர்களில் பலர் இங்குள்ள சிலரின் மகன்கள். என் தாத்தாவிடம் போய் அவர் தம் மகளைத் தமக்கு விவாகம் செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்க அவர்களுக்குத் துணிச்சல் இல்லை. என் தந்தை இல்லாத காரணத்தால் இவர்கள் திறந்த வீட்டில் நாய் நுழைவது போல நுழைந்து ஊளை இடுகிறார்கள். இப்படி இவர்கள் ஏன் தொல்லைகள் கொடுக்க வேண்டும்? இவற்றையெல்லாம் ஏன் நாங்கள் அனுபவிக்க வேண்டும்? இதுபற்றி நீங்கள் எல்லோரும் ஆழ்ந்து யோசிக்க வேண்டும்'' என்றான்.

அப்போது துர்புத்தி என்பவன் எழுந்து ''தீரமதி! நீ கூறும் குற்றச்சாட்டுக்கு அர்த்தமே இல்லை. தவறு உன் தாயாரின் மீதுதான் உள்ளது. அவள் ஏதோ துணி நெய்வதாகக் கூறி மூன்று ஆண்டுகளாக எங்களை ஏமாற்றி வந்திருக்கிறாள். அவள் அதை முடித்து எங்களில் ஒருவரை மணந்து கொள்வ

தாகச் சொன்னதன் பேரில்தானே நாங்கள் எல்லோரும் அங்கு இருந்தோம்? ஆனால் நடந்தது என்ன? மூன்று ஆண்டுகள் முடிந்ததும் அந்த ஆடை நெய்து முடிக்கப் படவில்லை. இதற்கு என்ன காரணம்? பகலில் அவள் நெய்த துணியை இரவில் பிரித்து விடுவது தான். அதனால் அவளை மணக்க விரும்புவோர் சார்பாக இதை நான் கூறுகிறேன். இப்போதே பத்மமுகி எங்களில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து மணந்து கொள்ளட்டும். மற்றவர்கள் போய் விடுவார்கள். அவள் மட்டும் ஏமாற்றிக் கொண்டே வந்தால் நாங்களும் அங்கிருந்து வெளியேற மாட்டோம்'' என்றான்.



தீரமதியோ ''இவர்கள் என் தாயை மறுமணம் செய்து கொள்வது என்ற பிரச்னை எழுந்தால் நான் அவளை என் அரண்மனையிலிருந்து போகச் சொல்ல வேண்டும். அப்படிச் செய்ய முடியாது. ஏனெனில் இவள் தந்தை கொடுத்த நகைகளை இவளுக்குத் திருப்பிக் கொடுக்கும் நிலையில் நான் இல்லை'' என்றான்.

அப்போது இன்னொரு கிழவன் எழுந்து ''ரூபதரன் போருக்குப் புறப்படும் போதே அவன் இருபத்தொரு ஆண்டுகள் கஷ்டங்களை அனுபவிப்பான் என்றும் ஆனால் திரும்பி வருவான் என்றும் சோதிடம் கூறினேன். இதுவரை நான் கூறிய சோதிடம் பொய்யானதில்லை. அவன் விரைவிலேயே திரும்பி வரத்தான் போகிறான். அவன் வீட்டில் கொட்டம் அடிப்பவர்களுக்கோ கேடு காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது'' என்றான்.

அப்போது ஒரு இளைஞன் ''ஏய் கிழவா! உன் சோதிடத்தைக் கொண்டு போய்க் குப்பையில் போடு. நான் பத்மமுகியை மணந்தே தீர்வேன். ரூபதரனே திரும்பி வந்தாலும் என்னை ஒன்றும் செய்து விட முடியாது. தெரிந்ததா?'' என்று கர்வமாகக் கூறினான்.

தீரமதியோ ''நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன். எனக்கு இருபது மாலுமிகளையும் ஒரு கப்பலையும் கொடுங்கள். நான் ஸ்பார்ட்டாவுக்கும் பைலாசுக்கும் போய் என் தந்தையைப் பற்றிய செய்தியை அறிந்து வருகிறேன். என் தந்தை

இறந்து விட்டார் என்பது உறுதியாகி விட்டால் நான் அவருக்கு ஈமச்சடங்கு களைச் செய்துவிட்டு என் தாயின் மறு மணத்திற்கும் ஏற்பாடுகளைச் செய் கிறேன்'' என்றான்.

கூட்டத்தில் பேசிவிட்டு வீடு திரும் பிய தீரமதி சற்று நேரம் கழித்து கடற் கரைக்குச் சென்றான். அங்கு அவன் சகசன் என்பவனைச் சந்தித்தான். சகசன் ரூபதரனின் வெகுநாளைய நண் பன். அவன் தீரமதியைக் கண்டதும் ''தீரமதி! உன்னைக் கண்டு எவ்வளவு சந்தோஷப்படுகிறேன் தெரியுமா? நீ உன் தந்தைக்கு ஏற்ற மகனாகவே இருக் கிறாய். இதாகாவில் பல நல்ல கப்பல் கள் உள்ளன. அவற்றில் மிக நல்லதைத் தேர்ந்தெடுத்துக் கொடுக்கிறேன். நீ கப் பலில் செல்லத் தக்க மாலுமிகளையும் தேர்ந்தெடுத்துக் கொடுக்கிறேன். நீ பயணத்திற்கான மற்ற ஏற்பாடுகளை எல்லாம் செய்'' என்றான்.

தீரமதி அதுகேட்டு மிகவும் மகிழ்ந்து போய் வீட்டிற்குத் திரும்பிச் சென்றான். அவனைப் பார்த்த அரச குமாரர்களெல்லாம் ஓரிடத்தில் நின்று கொண்டு கேலியாகச் சிரித்தார்கள். ஒருவன் ''அடேயப்பா! வீராதி வீரன், சூராதி சூரன் வருகிறான். எல்லோரும் ஓடிப் பதுங்குங்கள்'' என்று உரத்த குரலில் கூவினான். மற்றொருவன் ''இவன் ஸ்பார்ட்டாவுக்கும் மற்ற இடங்களுக்கும் போய் படை திரட்டிக் கொண்டு வந்து நம்மைத் தாக்கப் போகிறான்'' என்றான். வேறொருவன் ''இவன் நாம் சாப்பிடப் போகும் உண வில் விஷத்தைக் கலக்கப் போகிறான்''



என்றான். இன்னொருவன் ''இவனும் இவன் தந்தையைப் போலக் கடலில் மூழ்கிச்சாகத்தான் போகிறான். பிறகு நம் பாடு கொண்டாட்டம்தான்'' என்றான்.

தீரமதி அவர்கள் சொன்னதை எல்லாம் பொருட்படுத்தவில்லை. அவன் உள்ளே போய்த் தன் பயணத்திற்கு வேண்டிய சாமான்களை எடுத்து வைக்கலானான். அவனுக்கு அப்போது உதவிய அவனது தாதியும் ''நீ போகாமல் இருந்து விடு. நீயும் போய் விட்டால் உன் தாயாரின் கதி என்ன ஆகும்? இந்த விபரீத எண்ணம் உனக்கு எப்படி ஏற்பட்டது?'' என்று கேட்டாள்.

தீரமதியோ ''பெரியம்மா! இது விதியின் போக்கு. நீ இதற்குத் தடையாக இராதே. இன்றிரவு என் தாயார் தூங்கிய பின் நான் புறப்பட்டுச் செல்கிறேன். அவளாக நான் எங்கே என்று கேட்டால் அப்போது நீ என் பயணத்தைப் பற்றிக் கூறு. பயணத்தின் போது எனக்கு வேண்டிய உணவுப் பொருள்களையும் எடுத்து வை'' என்று கூறினான்.

இதற்குள் சகசன் பல வீதிகளில் திரிந்து நல்ல மாலுமிகளாகத் தேர்ந்தெடுத்துக் கடற்கரைக்கு அனுப்பினான். நல்ல கப்பல் கூட ஒன்று கிடைத்து விட்டது. இரவில் எல்லோரும் வயிறு புடைக்கச் சாப்பிட்டு விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அப்போது சகசன் வந்து தீரமதியிடம் ''தீரமதி! பயணத்திற்கு எல்லாமே தயாராகி விட்டது. நீ வர வேண்டியது தான் பாக்கி'' என்றான்.

இருவரும் கடற்கரையை அடைந்தார்கள். பயணத்திற்கு வேண்டிய பொருள்களெல்லாம் ரூபதரனின் அரண்மனையிலிருந்து கப்பலுக்குக் கொண்டு வரப்பட்டன. அவற்றைக் கப்பலில் ஏற்றிவிட்டு தீரமதியும் கப்பலில் ஏறினான். நங்கூரம் எடுக்கப்பட்டது. காற்றும் அனுகூலமாக வீசிக் கொண்டிருந்தது. கப்பல் பைலாசுக்குக் கிளம்பியது.

**(தொடரும்)**



# அம்புலிமாமா செய்திகள்

## மிகச் சிறியது!

நம் நாடாளும் மன்றத் தேர்தல் அண்மையில் முடிவுற்றது. அத்துடன் சில மாநிலங்களின் சட்டப் பேரவைகளுக்கும் தேர்தல்கள் நடந்தன. குடியரசுத் தலைவர் ஆட்சியில் சிறிது காலம் இருந்த ஜம்மு கஷ்மீரிலும் தேர்தல்கள் நடந்தன. நம் நாட்டின் மிகச் சிறிய வாக்குப் பதிவு நிலையம் அப்பகுதியில்தான் உள்ளது. லடக் மாவட்ட ஹஸ்பாலாவில் ஒன்பது பேருக்காக ஒரு வாக்குச்சாவடி நிறுவப்பட்டது. அந்த இடம் கடல் மட்டத்திற்கு மேல் 5000 அடி உயரத்தில் உள்ளது.

உலகில் மிக அதிக மக்கட் தொகை கொண்ட நாடு சீனா. இதன் தீபெத் பகுதியில் ஒரு ஊரில் மூன்று வாக்காளர்களே உள்ளனர். திபெத்தின் தலைநகர் லாசாவின் தென் கிழக்கே 550 கி.மீ. தொலைவிலுள்ள யுமெனில் 75 வயதான தந்தை தன் இரு மகள்களோடு இருக்கிறார். அவர் அண்மைக் காலம் வரை ஊரின் நாட்டாண்மை. இப்போது அப்பதவியை அவரது மூத்த மகள் வகித்து வருகிறாள்.

## மிக உயரமானது!

மலேசியாவின் கோலாலம்பூரில் உலகிலேயே மிக உயரமான கட்டடம் கட்டி முடிக்கப்பட உள்ளது. 'பெட்ரோநாஸ் டவர்ஸ்' என்ற இக்கட்டடம் கட்டி முடிக்கப்பட்டது 445 மீட்டர் உயரம் இருக்கும். இதன்மீது அமைக்கப்படும் டி.வி. ஆண்டனாவின் உயரமும் இதில் சேர்க்கப்பட்டுள்ளது. அமெரிக்காவில் சிகாகோ நகரிலுள்ள ஸேயர்ஸ் டவர்ஸின் உயரம் 435 மீட்டரே.

## மிகப் பெரியது!

ஆசியாக் கண்டத்தில் மிகப் பெரிய ரயில் நிலையம் சீனாவின் பெய்ஜிங்கில் உள்ளது. ஒரே தடவையில் இங்கு 60 முதல் 90 வரை ரயில் வண்டிகள் வந்து போய்க் கொண்டிருக்கின்றன. ஒரு நாளில் 6,00,000 மக்கள் இந் நிலையத்தைப் பயன்படுத்துகிறார்கள். பெங் இதன் தொடக்க விழாவிற்குத் தலைமை தாங்கினார். சீனத் தலைவர் மான்டிதுங் மிகப் பெரிய இரும்புச் சிலை கொண்ட 'மான்டிதுங்' ரயிலைக் கொடி காட்டி ஓட வைத்தார். இந்த நிலையத்தை மூன்று ஆண்டுகளில் இருபதாயிரம் வேலையாட்கள் வேலை செய்து கட்டி முடித்தார்கள்.

ஆசியாவில் மற்றொரு நாடான தாய்லாந்தின் தலைநகர் பாங்காக்கில் உலகின் மிகப் பெரிய ரெஸ்டோரண்ட் உள்ளது. இது 3.34 ஏக்கர் நிலப்பரப்பில் கட்டப்பட்டுள்ளது. ராயல் ட்ரேகன் என்ற இந்த ரெஸ்டரண்டில் 200 பணியாட்களும் 540 ஆண், பெண் வெய்டர்களும், 325 பெரிய சமையல்காரர்களும் இருக்கிறார்கள். வெய்டர்கள் ரோலர்ஸ் கெட்ஸ் மீது சென்று தம் பணியைச் செய்து வருகிறார்கள். ஒரு தடவை இதில் 5000 பேர் ஒன்றாக இருந்து சாப்பிட முடியும். இந்த ஹோட்டலில் எப்போதும் கூட்டம் இருக்கும். இங்கு மணிக்கு 3000 வகை திண்பண்டங்கள் தயாராகின்றன. உணவுக் கூடம் என்று பெரிதாக எதுவும் இல்லாமல் தனித்தனி விடுதிகளாகவே உள்ளன.



# அறிவுரை சரியே!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ செய்து வரும் விடா முயற்சியைப் பார்த்தால் உன் வாழ்நாள் முழுவதையும் இந்த மயானத்திலே கழிப்பாய் போலத் தெரிகிறது. ஒரு விஷயத்தை நினைவில் வைத்துக் கொள். மனிதனின் இயல்பு பிறருக்கு நன்மை செய்யா விட்டாலும் கெடுதலைச் செய்ய முனைவதே. நீ இம்மாதிரி மனிதனின் பிடியில் சிக்கி அவதிப்படுகிறாயா? இது உண்மையானால் இந்த முயற்சியை விட்டு விட்டு உன் அரண்மணைக்குத் திரும்பிப் போய் விடு. இது பற்றி விளக்க உனக்கு விக்கிரமசிம்மன் என்பவனைப் பற்றிக் கூறு

## வேதாளம் சொல்லும் கதை



கிறேன். கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

ஒரு ஊரில் விக்கிரமசிம்மன் என்ற இளைஞன் இருந்தான். அவன் சிறு வயதிலேயே தாய் தந்தையரை இழந்தவன். உற்றார் உறவினர் என்று சொல்லிக் கொள்ளவும் அவனுக்கு யாரும் இல்லை. அவன் எங்கு என்ன வேலை கிடைத்தாலும் அதைச் செய்து எப்படியோ தன் வாழ் நாட்களைக் கழித்து வந்தான்.

அந்த ஊரில் மாலினி என்ற இளம் பெண் இருந்தாள். ஒருநாள் அவள் ஒரு அதிசயக் கனவுக் கண்டாள். அதில் ஒரு சாது தோன்றி ''நீ தக்க இளைஞனைத் தேர்ந்தெடுத்து மணம் புரிந்து கொண்டால் வாழ்க்கையில் சுகம் அடைவாய்'' என்று கூறினார். ''தக்க இளைஞன் என்று எப்படி நான் காண்பது?'' என்று அவள் அந்த சாதுவிடம் கேட்கவே அவரும் ''நீ ஒருவனிடம் ஆகாயத்தில் எவ்வளவு நட்சத்திரங்கள் உள்ளன என்று கேட்க, அவன் நமது திருமணம் ஆன பின் இருவரும் உட்கார்ந்து எண்ணிப் பார்ப்போம் என்று பதில் கூறினால் அவனே உனக்குக் கணவனாக ஏற்றவன் என்று நீ தெரிந்துக் கொள்'' என்றான்.

அவளது கனவு கலைய விழிப்பு வந்தது. தனக்கு இப்படிப் பட்ட கனவு ஏன் வந்தது என்று எண்ணி அவள் ஆச்சரியப்பட்டாளாயினும் அக்கனவுக் கண்டது பற்றி யாரிடமும் அவள் கூறவில்லை. ஒருநாள் மாலை அவள் தன் சிநேகிதிகளுடன் ஒரு மாந்தோப்பிற்குச் சென்றாள். அங்கு எல்லோரும் ஓடி மறைந்து கண்டு பிடிக்கும் கண்ணாம் மூச்சி விளையாட்டை விளையாடிக் கொண்டிருந்தார்கள். மாலினி ஒரு மரத்தின் பின்னால் ஒளிந்து நின்ற போது சரியாகப் பாராமல் ஒரு பாம்பின் வாலை மிதித்து விட்டாள்.

பாம்போ 'புஸ்'ஸென சீறிப் படம் எடுத்தது. இதற்குள் யாரோ அவள் கையைப் பிடித்து இழுத்து சற்று தூரமாகத் தள்ளி நிறுத்தினார். பாம்பும் உடனே தன் படத்தைக் குறுக்கி 'சர, சர' என்று போய்விட்டது. அப்போது மாலினி தன் கையைப் பிடித்து பாம்பிலிருந்து சற்றுத் தள்ளி இழுத்து நிறுத்தியவர் யாரென்று பார்த்தாள். அவன்

விக்கிரமசிம்மன்.

விக்கிரமசிம்மனும் தான் கைப் பற்றி இழுத்து நிறுத்திய அழகிய மங் கையைப் பார்த்துக் கொண்டே நின் றான். மாலினிக்கு விக்கிரமசிம் மனைப் பற்றி நன்கு தெரியும். ஆனால் அவனை அவ்வளவு அருகில் அவள் பார்ப்பது அதுவே முதல் தடவை. பார்க்க அவன் ஒரு ராஜ குமாரன் போல இருக்கிறான் என்று அவள் எண்ணினாள். அவள் அவனிடம் ''என்னைப் பாம்பிடமிருந்து காப் பாற்றியதற்கு மிக்க நன்றி'' என்றாள்.

விக்கிரமசிம்மனும் ''உன்னைக் காப்பாற்றவே உன் கையைப் பிடித்துச் சற்றுத் தள்ளி நிறுத்தினேன். என் மெய் சிலிர்த்தது. என் வாழ்க்கையில் இது போன்ற ஆனந்தத்தை அனுபவித்ததே இல்லை. அதனால் நான்தான் உனக்கு நன்றி செலுத்த வேண்டும்'' என்றான். இப்படிச் சாதுரியமாகப் பேசும் விக் கிரமசிம்மன் ஒருவேளை தனக்கு ஏற்ற கணவனாக இருப்பானோ என அவள் நினைத்தாள்.

அவள் ''நீ மிகவும் பெரிய புத்திசாலி என்பது தெரிகிறது. ஆகாயத்தில் எவ் வளவு நட்சத்திரங்கள் உள்ளன என்று உன்னால் கூற முடியுமா?'' என்று கேட் டாள். விக்கிரசிம்மனும் ''சொல்ல முடியும். நான் கணக்கிட்டிருக்கிறேன். ஆனாலும் இன்னமும் அந்த வேலை முடியவில்லை என்னை மணந்து கொள்ளும் பெண்ணின் உதவி கொண்டு அந்த வேலையைச் செய்து



முடிப்பேன்'' என்றான். அது கேட்டு மாலினி அவனேதான் மணக்க ஏற்ற வன் என எண்ணி மகிழ்ந்து போனாள். அவள் வெட்கத்தால் தலை குனிந்து கொண்டு விர்ரென அங்கிருந்து சென்று விட்டாள்.

அவள் தன் வீட்டை அடைந்த போது சந்திரகாந்தன் என்ற இளைஞன் வந்திருந்தான். அவன் மாலினியை மணக்க விரும்பி அவளது தாய் தந்தை யருக்குப் பணத்தாசையைக் காட்டி னான். அவர்களும் அவன் விரித்த வலையில் வீழ்ந்து விட்டார்கள். சந்திர காந்தன் போனபின் மாலினி தன் பெற்றோர்களிடம்தான் கண்ட கன வைக் கூறி தான் விக்கிரமசிம்மனை மணக்க விரும்புவதாக கூறினாள்.



கொஞ்சம் அவகாசம் கொடுங்கள், அதற்குள் விக்கிரமசிம்மன் சந்திரகாந்தனை விடப் பெரிய பணக்காரனாகி விடுவார். அப்போது என்னை அவருக்கு மணம் செய்து வைக்க வேண்டும்'' என்றாள்.

மாலினியின் தந்தை அதைக் கேட்டு பலமாகச் சிரித்து ''உன் விக்கிரமசிம்மனால் ஒரு வருடத்திற்குள் லட்சம் வராகன்கள் சம்பாதித்து விட முடியுமா? சந்திரகாந்தனிடம் இப்போதே லட்சம் வராகன்கள் உள்ளது உனக்குத் தெரியுமா?'' என்றான். மாலினியும் ''என் கனவின்படி எனக்கு ஏற்ற கணவன் என்றால் கண்டிப்பாகச் சம்பாதித்து விடுவார். அப்போது என் கனவை நீங்கள் நம்புவீர்கள்'' என்றாள். அவளது தந்தையும் அதற்குச் சம்மதித்தார்.

மாலினி விக்கிரசிம்மனைக் கூட்டி வரச் செய்து அவனிடம் தன் தந்தை விதித்த நிபந்தனையைக் கூறினாள். விக்கிரசிம்மனுக்கும் எப்பாடுபட்டாவது பணம் சம்பாதித்து மாலினியை மணக்க வேண்டும் என்ற ஆசை அதிகரித்தது. அவன் பணம் சம்பாதிக்க நகரத்திற்குச் சென்றான். பல வேலைகளைச் செய்தான். சில மாதங்கள் கழிந்தன. ஆனால் அதுவரை ஆயிரம் வராகன்கள் கூடச் சேர்க்க முடியவில்லை.

ஒருநாள் அவன் தெரு வழியே போன போது ஒரு முரட்டுக் காளை ஒரு சாதுவை முட்டப் போவதைக்

அதைக் கேட்டு மாலினியின் தந்தை ''கனவாவது! மண்ணாங் கட்டியாவது!! அந்த விக்கிரமசிம்மன் நல்ல சிவப்பு நிறமாய் வாட்ட சாட்டமாக இருக்கிறான் என்று இவள் மயங்கி விட்டாள். ஒரு செல்லாக்காசு கூட இல்லாத அவனுக்கா என் மகளைக் கல்யாணம் செய்து கொடுப்பேன்? முடியாது. நான் மாலினியைச் சந்திரகாந்தனுக்குத்தான் கல்யாணம் செய்து வைக்கப் போகிறேன்'' என்றான் ஒரே பிடிவாதமாக.

மாலினிக்குத்தன் தந்தையின் பிடிவாதம் எப்படிப்பட்டதென்று தெரியும். அதனால் அவள் ''அப்பா! என் கனவு உண்மையை அடிப்படை கொண்டது என நிரூபிக்க எனக்குக்

கண்டு அவரை அதனின்று காப்பாற்றினான். சாது மிகவும் மகிழ்ந்து போய் அவனைப் பற்றி விசாரித்து விவரமாகத் தெரிந்து கொண்டார். அவர் அவனிடம் "நீ இந்தப் பெருந்தொகையை உடனடியாகச் சம்பாதிக்க ஒரு வழி உள்ளது. ஆனால் அது மிகவும் ஆபத்தானது" என்றார். விக்கிரமசிம்மனோ "அந்த வழி எவ்வளவு ஆபத்தானதாக இருந்தாலும் கூறுங்கள். நான் என் உயிரை லட்சியம் செய்யாமல் அந்தப் பணத்தை அடைவேன்" என்றான்.

சாதுவும் "இந்நகரின் தெற்கே சற்றுத் தொலைவில் ஒரு காடு உள்ளது. அதிலுள்ள மலையில் ஒரு குகை உள்ளது. அதற்குள் ஏராளமாகப் பணம் உள்ளது. அது கோடிக்கணக்கான வராகன்களாகும். ஆனால் அந்த செல்வத்தை இரவும் பகலும் ஒரு ராட்சஸன் காவல் காத்து வருகிறான். அவனுக்குத் தெரியாமல் அந்தப் பணத்தை எடுத்து வருவது மிகவும் கடினமானது" என்றார்.

விக்கிரமசிம்மன் அக்குகையைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டு அப்போதே அக்காட்டிற்குச் சென்றான். சற்று நேரத்தில் அவன் அக்குகையைக் கண்டு பிடித்தும் விட்டான். குகை வாசலில் ராட்சஸன் உட்கார்ந்து தூங்கிக் கொண்டிருப்பதை அவன் கண்டான். ராட்சஸன் பார்க்க பயங்கரமாக இருப்பது கண்டு பயந்தாலும் துணிவை வரவழைத்துக் கொண்டு அவனருகே சென்றான்.



ராட்சஸன் கண் விழித்து "ஓ! நீ என் கண்ணில் படாமல் குகைக்குள் போய் விட நினைக்கிறாயா? உன்னை இங்கே அந்த சாது அனுப்பினானா? சரி. முதலில் என்னைப் பற்றித் தெரிந்து கொள்" என்று கூறித் தன்னைப் பற்றிச் சொல்லலானான்.

"முன் பிறப்பில் அந்த மாலினி என் மகளாக இருந்தாள். அவளை அவள் விரும்பாத ஒருவனுக்கு மணம் செய்து வைத்தேன். அதனால் அவள் தற்கொலை செய்து கொண்டாள். இப்படி மகளை அவள் விரும்பாத ஒருவனுக்கு மணமுடித்து வைத்த பாவத்துக்காக நான் ராட்சஸனாக பிறந்தேன். தான் ஒரு பெண்ணை அவளது விருப்பத்திற்கு மாறாக மணந்து கொண்ட



பாவத்திற்காக அவளை மணந்த கணவன் மறுபிறவியில் சாதுவாகத் திரிகிறான். எங்கள் இருவருக்கும் முன் பிறப்பைப் பற்றிய நினைவு உள்ளது. முன் பிறப்பில் நாங்கள் செய்த தவறைத் திருத்த முயல்கிறோம். சாது மாலினியின் கனவில் தோன்றி அவளுக்கு விக்கிரமசிம்மன் மீது ஆசை ஏற்படும்படிச் செய்தான். ஏனெனில் முன் பிறப்பில் மாலினி விரும்பியது விக்கிரமசிம்மனாகிய உன்னையே.''

இதைக் கேட்ட விக்கிரமசிம்மன் மகிழ்ந்து ''அப்படியானால் நீ எனக்கு உதவத்தானே போகிறாய்?'' என்று கேட்டான். ராட்சஸனும் ''ஆகா தாராளமாக. ஆனால் நீ எனக்கு ஒரு உபகாரம் செய்ய வேண்டும். நன்றாகக் கேட்டுக்கொள். நான் உனக்கு இரண்டு லட்சம் வராகன்கள் கொடுக்கிறேன். நீ மாலினியை மணந்து கொள்ளலாம். ஆனால் ஒரு வருடத்திற்குள் எங்காவது ஒரு பெண்ணுக்கு விருப்பமில்லாத திருமணம் நடக்குமாறு நீ செய்ய வேண்டும்'' என்றான்.

அது கேட்டு விக்கிரசிம்மன் ''இதனால் உனக்கு என்ன லாபம்?'' என்று கேட்டான். ராட்சஸனும் ''இந்த குகையில் ஏராளமான செல்வம் உள்ளது. இதிலிருந்து எவ்வளவு எடுக்கிறோமோ மீண்டும் அதே அளவு செல்வம் அதில் சேர்ந்து விடும். எனவே இந்த மாபெரும் நிதியை யாராவது ஒருவர் காவல் காத்து வரவேண்டும். மாலினி விரும்பாத விவாகம் மட்டும் அவளுக்கும் சந்திரகாந்தனுக்கும் நடந்திருந்தால் அதைச் செய்த அவளது தந்தை மறுபிறவியில் ராட்சஸனாகி இங்கு காவல் காக்க வந்து விடுவான். எனக்கு விடுதலை கிடைத்திருக்கும். அது போல சந்திரகாந்தன் சாதுவாகப் பிறந்திருப்பான் அந்த சாதுவுக்கும் விடுதலை கிடைத்திருக்கும். எனவே இனி ஒரு பெண்ணுக்கு அவளுக்கு இஷ்டமில்லாத விவாகம் நடந்தாலே எங்கள் இருவருக்கும் விடுதலை. அதனால்தான் உன்னிடம் இப்படிப் பட்ட உதவியைக் கேட்டேன்'' என்றான்.

விக்கிரசிம்மனும் ''அப்படி ஒரு கல்யாணம் உலகில் எங்குமே நடக்காவிட்

டால் என்ன ஆகும்?'' என்று கேட்க ராட்சஸன் பலமாகச் சிரித்து ''இந்த உலகில் எதாவது ஒரு பெண்ணுக்குக் கூட அவளுக்கு விருப்பமில்லாத கல்யாணம் நடக்காது என்றா நினைக்கிறாய்? எங்காவது நடக்கும். உனக்கும் மாலினிக்கும் நாங்கள் இருவரும் சேர்ந்து கல்யாணம் செய்து வைப்பதால் அந்தப் புண்ணியத்தால் எங்களுக்கு விடுதலை கிடைக்கும். இந்த குகையின் காவலுக்கு ஒருவன் கிடைக்காமல் போக மாட்டான்'' என்றான்.

விக்கிரமசிம்மனும் ''சரி, நீ விரும்பியதைச் செய்கிறேன்'' எனவே ராட்சஸனும் ''நீ இங்கிருந்து போய் உன் வீட்டை அடையும் போது அங்கு இரண்டு லட்சம் வராகன்கள் இருக்கும். உன் விருப்பப்படி மாலினியை மணந்து கொண்டு சுகமாக இரு ஆனால் எனக்குக் கொடுத்த வாக்கை மறந்து விடாதே'' என்றான்.

விக்கிரசிம்மன் அங்கிருந்து சென்று தன் வீட்டை அடைந்ததும் அங்கு இரண்டு லட்சம் வராகன்கள் இருந்தன. அவன் மாலினியை மணந்து கொண்டான். ஒருநாள் தனபாலன் என்பவன் விக்கிரமசிம்மனின் வீட்டிற்கு வந்து ''என் மகள் பணம் காசு இல்லாத ஒருவனை மணக்க விரும்புகிறாள். அதை நான் விரும்பவில்லை. ஒரு காலத்தில் நீயும் ஏழையாகத் தானே இருந்தாய்? திடீரென உனக்குப் பணம் கிடைத்தது எப்படி? அதை நீ அந்த ஏழை வாலிபனுக்குச் சொன்னால் அவர்கள் விவாக நடக்கும்'' என்றான்.



விக்கிரசிம்மனும் சற்று யோசித்து ''இதோ பார். பணம் கிடைப்பது அவரவர் அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது! நானும் மாலினியும் சுகமாக இருக்கிறோம் என்றால் அதற்குக் காரணம் பணமே. நீ உன் மகளை அவள் விருப்பப்படி அந்த ஏழை வாலிபனுக்கு மணம் செய்து வைக்காதே. உன் விருப்பப்படி நல்ல பணக்கார வாலிபனாகப் பார்த்துக் கல்யாணம் செய்து வை'' என்றான். அதைக் கேட்டு தனபாலன் அவ்வாறே செய்வதாகக் கூறி மகிழ்ச்சியுடன் சென்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! விக்கிரமசிம்மன் தனபாலனுக்கு கூறிய அறிவுரை சரியானதா? ஒரு பெண்ணிற்கு அவளது விருப்பத்திற்கு மாறாக மணம் செய்து வைப்பது அவளது வாழ்வைப் பாழாக்குவது போலத்தானே! மாலினியும் அவனும் விரும்பி மணம் புரிந்து கொண்டது போல தனபாலனின் மகளின் விவாகமும் நடக்க விக்கிரமசிம்மன் ஏன் அறிவுறுத்தவில்லை? இதற்குச் சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''தனக்கு உதவிய ராட்சஸனை காவல் வேலையிலிருந்து விடுவிப்பதாக அவன் வாக்களித்தவன். அதைக் காக்கவும் வேண்டும். தனபாலன் மீது இரக்கப்பட்டாலும் உலகில் தனபாலனைப் போல பல தந்தைகள் தம் மகள்களின் விருப்பத்திற்கு மாறாகக் கல்யாணம் செய்து வைப்பவர்கள் இருக்கத்தான் இருப்பார்கள். அந்தப் பலரில் இந்த தனபாலனும் ஒருவனாக இருந்து விட்டுப் போகட்டுமே என்று நினைத்தான். எனவேதான் தனபாலனுக்கு விக்கிரமசிம்மன் அவ்வாறு அறிவுரை கூறினான். அது சரியே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# கோவா

கருத்து: **மீராநாயர்** ◆ ஓவியர்: **கௌதம் சென்**




பரசுராமர் கொடுங்கோல் மன்னர்களை தண்டித்தபின் அமைதியான ஓரிடத்தில் அமர்ந்து தவம் செய்ய எண்ணி அம்பை எய்ய அது தரையைக் கிழித்து மேற்குக் கடலில் விழுந்தது. அம்பு சென்ற பகுதி நிலப்பகுதியாகியது. அதுதான் கோவா என்று ஒரு புராணக் கதை வழக்கில் உள்ளது.

கோவாபூர் எனப்படும் கோவா கி.பி. மூன்றாவது நூற்றாண்டிலேயே அரபு நாடுகளுடன் வியாபாரத் தொடர்பு கொண்ட துறைமுகமாக விளங்கியது. என பழங்கால ஆராய்ச்சித் துறை தமது ஆய்வில் கூறியது. கி.பி. 15ம் நூற்றாண்டு வரை பல ஹிந்து மன்னர்கள் இப்பகுதியை ஆண்டனர். 15ம் நூற்றாண்டில் பீஜப்பூர் ஆதில் ஷாஹீ வம்சத்தை நிறுவியது. ஆதில்ஷா இதனைக் கைப்பற்றினார். கி.பி. 1510 போர்த்துக்கீசியர் இதைத் தம் வசப்படுத்திக் கொண்டார்கள். இவர்கள் இதனை 451 ஆண்டுகள் தம் வசம் வைத்திருந்தார்கள் 1961ல் இது பாரதத்துடன் இணைந்தது.



அல்பான்சோ டி. அல்புகர்க் கி.பி. 1510ல் கோவாவைக் கைப்பற்றினான்

கோவாவிற்கு 150 கி.மீ. நீளக் கடற்கரை உள்ளது. வடக்கே டெரிகோஸிலிருந்து தெற்கே பாலேம் வரை கற்பாறைகளும் சிறு குன்றுகளும் மணற் பகுதியும் தென்படுகின்றன. இப்பகுதிக் குன்றுகளில் பாதுகாப்பிற்காகப் போர்த்துக்கீசியர்கள் ஆங்காங்கே கோட்டைகளைக் கட்டினார்கள்.

இவற்றில் மிக அழகானது அக்வாடா கோட்டை. அக்வா என்றால் தண்ணீர் என்று பொருள். இக்கோட்டையில் நல்ல நீர் ஊற்றுக்கள் பல உள்ளன. இந்துமாக் கடலிலிருந்து வந்து மாண்டவி நதிக் கடை முகத்தை அடையும் கப்பல்களுக்கு இந்த அக்வாராக்



அக்வாடா கோட்டை

கோட்டை தங்குமிடமாக நிர்மானிக்கப்பட்டது. செயிண்ட் பீட்டர்ஸ் பாஸில்கா போன்ற செயிண்ட் காஜடான் சர்ச் இங்கு உள்ளது. இதற்கு எதிரே ஆசியாவிலேயே மிகப் பெரிய கதீட்ரல் இங்கு உள்ளது. நல்ல நாதத்தை ஒலிக்கும் 'செனேடோ ஜேரோ' என்ற புகழ் பெற்ற தங்க மணி இங்கு உள்ளது. இதற்கும் கொஞ்ச தூரத்தில் செயிண்ட் பிரான்சிஸ் ஜேவியர் சர்ச் எனப்படும் போன் ஜேஸஸ் பாஸலிகா உள்ளது. செயிண்ட் பிரான்சிஸ் ஜேவியரின் பூத உடல் இங்கு பாதுகாக்கப்பட்டு வருகிறது. இக்காரணத்தால் இந்த சர்ச் கோவாவில் மிக முக்கியமானதாகக் கருதப்படுகிறது. செயிண்ட் பிரான்சிஸ் ஜேவியர் ஸ்பெயினில் கி.பி. 1506ல் நவாரேயில் பிறந்தவர். அவர் கல்லூரியில் படிக்கும் போதே இக்னேஷியஸ் லயோலாவால் ஈர்க்கப்பட்டு தன் வாழ்க்கையைக் கடவுளின் பணிக்கு அர்ப்பணித்தார். அவர் 1562 மே 6ல் கோவாவிற்கு வந்தார். கொங்கணி மொழியில் இவர் கிருஸ்துவ மதப் பிரசாரம் செய்தார். இங்கு சில நாட்கள் இருந்த பின் சோழ மண்டலக் கடற்கரை, ஸ்ரீலங்கா, மலாக்கா, மொலுகஸ், ஜப்பான், சீனா ஆகிய பிரதேசங்களுக்குச் சென்றார். 1552ல் சீனாவின் சஞ்சியன் தீவில் டிசம்பர் 3ல் மரணமுற்றார். அங்கு புதைக்கப்பட்ட அவரது உடல் இரண்டு ஆண்டுகளுக்குப்பின் தோண்டி எடுத்துப் பட்ட போது சற்றும் கெடாமல் அப்படியே இருந்தது. அதை அங்கிருந்து கோவாவிற்குக் கொண்டு வந்தார்கள். இங்கு பத்திரப்படுத்தி வைத்த இவரது உடலை பத்து ஆண்டுகளுக்கு ஒரு முறை போன் ஜீசஸிலிருந்து கதீட்ரலுக்கு பக்தி சிரத்தையுடன் ஊர்வலமாக எடுத்துச் செல்கிறார்கள். இந்த ஊர்வலத்தில்



டோனாபோலாப் பிரதேசம்



ஸே. கதீட்ரல்

செயிண்ட் பிரான்சிஸ் ஜேவியர்

கலந்து கொள்ள உலகின் பல பாகங்களிலிருந்து மக்கள் வருகிறார்கள். போன் ஜீஸஸ் எதிரே உள்ள குன்றின் மீது செயிண்ட் மோனிக்கா கான்வென்ட் உள்ளது. இது ஆசியாக்கண்டத்திலுள்ள மிகப் பழைய 'நந் நரி' (சன்னியாசினிகள் உறைவிடம்) எனக் கருதப்படுகிறது.

கோவாவின் தலைநகர் பானாஜீ மாண்டவி நதிக் கரையில் உள்ளது. மிகப் பழைய நகர். இங்கு ஆதில்ஷா கட்டிய மாளிகையில் இன்றைய தலைமை செயலகம் அமைந்துள்ளது. இதன் இடது பக்கம் ஒரு ஸ்திரீயை ஹிப் நாடிஸ வாயிலாக குணப்படுத்திய பங்கிம்லோ எட்பரியாவின் வெங்கல உருவச் சிலை உள்ளது. எட்பரியாவாகப் புகழ் பெற்ற பாதர் ஜோஸ்கஸ் டோடியாடி பரியா ஒரு அர்ச்சகர். பண்டிதர், விஞ்ஞானி அவர் இளைஞனாக இருக்கும் போதே போர்ச்சுகலுக்குச் சென்றார். பாதர் ஆப் மெஸ்மரிசம் என்று பெயர் பெற்ற அவர் ஹிப்நாடிசத்தை ஒரு விஞ்ஞானக் கலையாக நிரூபிக்க முயன்ற முதலாவது பண்டிதர் இவரைத்தான் பிரபல நாவலாசிரியர் அலெக்ஜாணடர்டுமாஸ் தம் நாவலான 'கௌண்ட் ஆப்' மாண்டிக்ரிஸ்டோ'வில் நியூட் மங்க் என்ற பாத்திரமாகச் சித்தரித்திருக்கிறார்.



பான் ஜீசஸ் பாஸலிகா



பானாஜீக்குத் தென்கிழக்கே புகழ் பெற்ற மங்கேஷ் சிவாலயம் உள்ளது. மனத் தாபப்பட்டு அங்கு வந்து விட்ட பரம சிவனைப் பார்வதி தேவி தேடிக் கொண்டு இங்கு வந்தாளாம். அப்போது அவள் எதிரில் ஒரு புலி வந்ததாம். அது கண்டு அவள் 'காப்பாற்றுங்கள்' என்று பிரார்த்திக்கவே சிவனும் அவள் முன் தோன்றினாராம். அந்த இடத்தில் மங்கேஷ் ஆலயம் தோன்றியதாம். இது மிகவும் புகழ் பெற்ற ஆலயம்.



கோவா விவசாய நாடு விவசாயம் முக்கிய தொழில்

அக்வாடா, ரிஜெம் கோஸ் முதலிய கோட்டைகள் போர்த்துகீசியர் ஆட்சி காலத்தில் கட்டப்பட்டவையாகும். இவை முன் போல இன்றும் சிறைச்சாலைகளாகப் பயன்பட்டு வருகின்றன. கோட்டைகளுக்குப் புகழ்பெற்ற கோவாவில் 'கோல்டன் பீச்சஸ்' என்ற கடற்கரைப் பகுதிகள் உள்ளன. ஹர்மால், சபோரா, வேகேடல், அஸ்கானா, வாகா காலாங்க்யூட், காஸபர் டயாஸ் முதலிய கடற்கரைப் பகுதிகள் சிறந்தவை. வில்போல் வளைந்துள்ள காலங்க்யூட் கடற்கரை 'க்வீன ஆப் தி பிச்சஸ்' என்று அழைக்கப் படுகிறது. சுற்றுலாப் பயணிகள் இங்கு ஏராளமாக வருகிறார்கள். இதற்குத் தெற்கே டோனா போலா என்ற கடற்கரை உள்ளது. ஒரு காலத்து வைஸ்ராயின் மகளின் பெயர் இதற்கு வைக்கப்பட்டதாம். இவள் தான் விரும்பிய மீனவ வாலிபனை மணக்க முடியாமல் போனதால் இங்கு கடலில் மூழ்கித் தற்கொலை செய்து கொண்டாள். அதனால் அவள் நினைவாக இப்பெயர் வைக்கப்பட்டது.

காலாங்க்யூட்டிற்கு வடக்கே வாகாபீச்சருகே நல்ல ஒளிவீசும் கலங்கரை விளக்கம் உள்ளது. இந்த சிறிய சர்ச்சிற்குப் போகும் வழியில் சிலுவையில் அறைந்ததின் பல அழகிய காட்சிகளைக் காணலாம்.



எட்பரியா சிலை

பானாஜீக்கு 9 கி.மீ. உயரத்தில் உள்ள வெல்ஹா கோவா 16ம் நூற்றாண்டில் கோவாவின் தலைநகரமாக இருந்தது. இன்று இது லிஸ்பனுக்கு இணையாக அழகாக உள்ளது. துறைமுகத்தருகே கோவாவின் தலைவாசலில் 'வைஸ்ராய் ஆர்ச்' உள்ளது. பதவி ஏற்கு முன் ஒரு வைஸ்ராய் இந்த ஆர்ச்சின் வழியாகச் சென்றே ஆக வேண்டும்.



ஸ்ரீமங்கேஷ் ஆலயம்



# குழந்தைக் குறும்பு

ஒரு வனத்தில் வித்தியாநாதர் என்பவர் ஒரு குருகுலம் நடத்தி வந்தார். அதில் ஆதித்தன் என்றும் ஆனந்தன் என்றும் இரு சீடர்கள் கல்வி பயின்று வந்தார்கள். அந்த இரு நண்பர்களும் அங்கு தம் படிப்பு முடிந்ததும் தம் ஊர்களுக்குச் சென்றனர். ஆதித்தன் தன் ஊரில் ஒரு பள்ளிக் கூடத்தை நிறுவி சிறுவர்களுக்கு கல்வி அளித்து வந்தான். ஆனந்தன் தன் ஊரில் வியாபாரம் செய்து வரலானான்.

ஆதித்தன் லட்சுமி என்ற பெண்ணை மணந்து கொண்டு தன் வருமானத்தில் திருப்தியுடன் வாழ்க்கை நடத்தி வந்தான். அவர்களுக்கு ஒரு ஆண் குழந்தை பிறக்கவே அதற்கு சுந்தரம் என்று பெயரிட்டு வளர்த்து வந்தார்கள்.

சுந்தரத்திற்கு இரண்டு வயதாக இருக்கையில் ஆனந்தன் தன் மனைவி அன்னபூரணியுடனும் தன் இரண்டு வயது மகனான சந்திரனுடனும் ஆதித்தனின் வீட்டிற்கு வந்தான். வெகு நாட்களுக்குப் பின் நண்பர்கள் இருவரும் சந்தித்ததால் உடல் நலம், ஊர் நலம், நாட்டு நலம் என்று பல விஷயங்களைப் பேசினார்கள். ஆதித்தன் தன் பள்ளிக்கூடம் நன்கு நடைபெற்று வருவதாகக் கூறினான். ஆனந்தனும் தன் வியாபாரம் அமோகமாக நடப்பதாகத் தெரிவித்தான்.

இது போல லட்சுமியும் அன்னபூரணியும் பேசிக் கொண்டிருந்தனர். அதனால் அவர்கள் தம் மகன்களை கவனிக்கவில்லை. திடீரென சந்திரன் கூக்குரலிட்டான். அதற்குக் காரணம் சுந்தரம் அவனை அடித்ததுதான்.

ஆனந்தன் சட்டென ஓடித் தன் மகனைத் தூக்கிக் கொண்டு ''ஆதித்தா! உன் மகனுக்கு முரட்டு சுபாவம் உள்ளது. இது நல்லதல்ல'' என்றான். ஆதித்தனோ சிரித்தவாறே ''அவன்

—பாபநாசம் சாமா—



கொஞ்சம் முரடன்தான். என்ன சொன்னாலும் கேட்பதில்லை. அவனைக் கண்காணித்தே வருகிறோம். ஆனால் இன்று கொஞ்சம் அசட்டையாக இருந்து விட்டோம்'' என்றான்.

ஆனந்தனும் ''என் மகன் சந்திரனைப் பார். அவன் இதுபோல முரட்டுத்தனமாக நடந்த போது ஓங்கி ஒரு அறை விட்டேன், அதற்குப் பிறகு அவன் அடங்கி விட்டான். எந்த விஷமமும் செய்யவில்லை. யாரையும் அடிப்பதில்லை. உன் மகனை இப்படியே விடாதே. அடி உதவுவது போல வேறு ஏதுவும் உதவாது. நல்ல விதமாகச் சொன்னால் எல்லாம் இவர்கள் கேட்க மாட்டார்கள். தெரிந்ததா?'' என்றான்.

ஆதித்தனும் நண்பன் கூறுவதும் சரியே என்று நினைத்தான் ஆனந்தன் ஊருக்குக் கிளம்பிப் போனதும் அவன் தன் மகனிடம் பரிவோ பாசமோ காட்டாமல் எதாவது விஷமம் செய்தால் அடிக்கலானான். அப்படியும் சுந்தரத்தின் விஷமங்களோ அல்லது முரட்டுத்தனமோ சற்றும் குறையவில்லை. ஆனால் சுந்தரம் அது முதல் தன் தந்தையருகே போகாமல் விலகி நிற்கலானான். அவன் தன் தந்தையைக் கண்டாலே பயந்து பதுங்கலானான்.

இது நடந்த சில நாட்களுக்குப்பின் வித்தியாநாதர் ஆதித்தனின் வீட்டிற்கு வந்தார். அவர் ஆதித்தனிடம் ''ஒரு குருவுக்கு சீடன் மகனுக்குச் சமம், சீடனின் மகன் குருவுக்குப் பேரனாகிறான். எனவே உன் மகனான என் பேரனை அழைத்து வா'' என்றார். அப்போது ஆதித்தன் தன் மனைவி லட்சுமியிடம் ''நீ சுந்தரத்தை அழைத்துக் கொண்டு இங்கே வா'' என்று கூறி விட்டு வெளியே சென்றான்.

லட்சுமியும் சுந்தரத்தை அழைத்து வரவே வித்தியாநாதர் அவனைத் தன் மடியில் உட்கார வைத்துக் கொண்டு அன்புடன் பேசி ''சரி, உன் கணவனை வரச்சொல். அவன் ஏன் வெளியே போய் நிற்கிறான்?'' என்று கேட்டார். லட்சுமியும் ''அவர் இப்போது வர மாட்டார். அவரைக் கண்டாலே என் மகனுக்கு பயம்'' என்று கூறி ஆனந்தன் அங்கு வந்து விட்டுப் போனதிலிருந்து ஆதித்தனின் போக்கு மாறியதை விவரமாகக் கூறினாள்.



அப்போது வித்தியாநாதர் ஆதித்தனைக் கூப்பிட்டு ''ஆதித்தா! யாரோ சொன்னான் என்பதற்காக நீ பெற்ற மகனிடமே இப்படியா கொடூரமாக நடந்து கொள்வது?'' என்று கடிந்து கொண்டார். ஆதித்தனும் ''ஐயா! யாரோ ஒருவர் சொல்லி அல்ல, என் ஆருயிர் நண்பன் ஆனந்தன் தன் தன் அனுபவத்தைச் சொன்னதால்தான் இப்படி நடக்கிறேன்'' என்றான். வித்தியாநாதர் புன்னகை புரிந்த ''ஆனந்தன் என் சீடன் அவனைப் பற்றி உன்னை விட நான் நன்கு அறிவேன். அவன் சொன்னான் என்று உன் மகனை அடிக்க ஆரம்பித்து விட்டாயே. இது அறிவீனம். குழந்தைகளை நல்ல வார்த்தைகள் சொல்லியே வளர்க்க வேண்டும். குழந்தை முரட்டுத்தனமாக நடக்கும் போது அது தவறு என்று அதனிடம் எடுத்துக் கூற வேண்டும்'' என்றார்.

ஆதித்தன் எதுவும் கூறாமல் யோசிக்கவே வித்தியாசநாதரும் ''சரி, நீ என்னுடன் வா. நாம் இருவரும் ஆனந்தனின் வீட்டிற்குப் போவோம். அப்போது உனக்கு எல்லாம் புரியும்'' எனக் கூறி அவனை அழைத்துக் கொண்டு ஆனந்தனின் ஊருக்குச் சென்றார். அங்கு அவர்கள் ஆனந்தனின் வீட்டை அடைந்த போது மாலை வேளை வந்து விட்டது ஆனந்தன் தன் குருவையும் நண்பனையும் வரவேற்று உபசரித்தான்.

பேச்சு வாக்கில் வித்தியாநாதர் ஆதித்தனின் மகன் சுந்தரம் செய்யும் குழந்தைத்தனக் குறும்புகளைப் பற்றிக் கூறினார். ஆனந்தனோ ''இந்த மாதிரி குழந்தைகள் குறும்புகள் செய்வது எனக்குக் கொஞ்சமும் பிடிக்காது. சுந்தரத்தின் முரட்டுத்தனம் பற்றி நான் நன்கு அறிவேன்'' என்றான். வித்தியாநாதரும் ''ஆனந்தா! அன்னப் பறவை நீரையும் பாலையும் வேறு படுத்துவது போல குழந்தைகளின் குறும்பையும் முரட்டுத்தனத்தையும் வேறுபடுத்திப் பார்க்க வேண்டும்'' என்றார். ஆனந்தன் பதில் எதுவும் கூறவில்லை.

இரவில் சாப்பிட அன்னபூரணி மூன்று இலைகளைப் போட்டாள். மூவரும் சாப்பிட அமர்ந்தனர். சந்திரன் அவர்களுக்குத் தண்ணீர் கொடுக்க

தம்ளர்களை எடுத்து வந்தான். வித்தியாநாதரும் அன்னபூரணியிடம் ''நீ தண்ணீரை அவனிடமிருந்து வாங்கிக் கொள். அவன் எல்லாவற்றையும் கீழே போட்டுக் கொட்டிவிடப் போகிறான்'' என்று எச்சரித்தார்.

ஆனந்தனோ ''வேண்டாம். அவன் கையிலிருந்து பிடுங்கினால் அழுவான். அவன் அழுகையை என்னால் சகிக்க முடியாது, அவன் டம்ளர்களை ஜாக்கிரதையாகவே கொண்டு வருவான்'' என்றான். இப்படி அவன் கூறிக் கொண்டிருக்கும் போதே சந்திரன் தன் தந்தையின் இலையில் தண்ணீரைக் கொட்டி விட்டான். ஆனந்தன் சட்டென எழுந்திருக்க முயலவே வித்தியாநாதர் அவனைத் தடுத்து ''அவன் அறியாச் சிறுவன்தானே. அவனை அடிக்காதே'' என்றார். அப்போது ஆனந்தன் ''நான் இந்தச் சிறு விஷயத்திற்காக அவனை அடிப்பேன் என்றா நினைத்து விட்டீர்கள்? நான் என் இலையிலுள்ள தண்ணீரை வடித்து விட அதை எடுக்கவே எழுந்தேன்'' என்றான்.

வித்தியாநாதரும் ஆதித்தனைக் கோபத்தோடு கடிந்து கொள்வது போல ''பார்த்தாயா! குழந்தைகள் குறும்பு செய்தால் ஆனந்தன் அடித்து விடுவான் என்று சொன்னாயே. இப்போது பார்த்தாயா? நீ சொன்னது தவறுதானே?'' என்று கேட்டார். குருவும் ஆதித்தனும் சேர்ந்து தன் வீட்டிற்கு ஏன் வந்தார்களென்னு அவனுக்குப் புரிந்து விட்டது.

அவன் உடனே ''சுந்தரம் செய்த சிறு குறும்பிற்காக ஆதித்தன் வீட்டில் அற்பத்தனமாக நடந்தேன். என் தவறு எனக்குப் புரிந்து விட்டது'' என்றான். வித்தியாநாதரும் ''பிறர் குழந்தைகளை நீ உன் குழந்தை போல நினைத்து நடந்தால் போதும் உன் குழந்தையும் நல்லவனாக இருப்பான்'' என்றார்.

இதற்குப் பின் ஆனந்தனும் ஆதித்தனும் தம் குழந்தைகளைத் திருத்த அடிக்காமல் நல்ல வார்த்தைகளையே கூறிவரலானார்கள்.



# பொன்மயமான பொழுதுகள்

## வானவெளி பயங்கர மிருகம்



பாரத நாட்டின் முதல் வானவெளிப் பயணி சூரியனிலும் சந்திரனிலும் இறங்கினார்
















# பொன்மயமான பொழுதுகள் பற்றிய வினாக்கள்



1. பாரதநாட்டின் முதலாவது விண்வெளிப் பயணிக்கு மேலிருந்து நம் நாடு எவ்வாறு காணப்பட்டது? என்று அவரிடம் கேட்டகப்பட்ட போது அவர் 'சாரே ஜஹாம் ஸே அச்சா' என பதில் கூறினார். இந்த விண்வெளிப் பயணி யார்? எந்த ஆண்டில் போய் வந்தார்?





3. கதையில் இந்தப் பாறையை செர்ஸ் என்கிறார்கள். இதன் குறுக்களவு 950 கி.மீ. இந்தப் பாறாங்கல் எங்கு உள்ளது? இதன் சிறப்பு என்ன?

7. அணிந்த உடைகளைக் கொண்டு இவர்கள் நம் நாட்டில் எப்பகுதியில் வாழ்பவர்கள் என்று கூற முடியுமா?

4. கிருஷ்ணரையும் அவரது தமையன் பலராமரையும் அவர்களது சகோதரி சுபத்திரையையும் மர விக்கிரக வடிவில் 12வது நூற்றாண்டில் கட்டப்பட்ட ஒரு ஆலயத்தில் வைத்து பூஜை செய்து வருகிறார்கள். அந்த புகழ்பெற்ற ஆலயம் எது?



5. 1996 பிப்ரவரி 1ல் ஒரு தவளை தானிருந்த 30 மீட்டர் ஆழக் கிணற்றிலிருந்து உயரக் கிளம்பி வெளியே வந்தது. பகலில் தினமும் 3 மீட்டர் உயரம் வந்தால் இரண்டு மீட்டர் கீழே போய் விடுகிறது. இப்படியே அது முயன்றால் எந்த மாதம் எந்தத் தேதி அது கிணற்றிற்கு வெளியே வரும்?





2. சவாய் ராஜா ஜெய்சிங் நம் நாட்டில் முதன் முதல் வான் கால ஆராய்ச்சி நிலையத்தை (ஜந்தர்மந்தர்) நிறுவினார். அதன் பின் ஜெய்பூர், மதுரா, உஜ்ஜயினி, வாரணாசி ஆகிய இடங்களிலும் அம்மாதிரி நிலையங்கள் நிறுவப்பட்டன. கிபி 1728 உலகிலேயே மிகப் பெரிய 'சன்டயல்' (சூரிய கடியாரம்) ஒன்றை அவர் நிறுவினார். அதன் பெயர் என்ன?

∃4+4|=|

6. இரண்டு நெருப்புக் குச்சிகளை மாற்றி அமைப்பதன் வாயிலாக இந்த 'ஈக்வேஷனை' சரி செய்யலாம். செய்து பாருங்கள்.









# 3டி மாஸ்க் (முகமூடி) தயாரித்துக் கொள்ளுங்கள்!







1. ஒரு ரப்பர் பலூனை எடுத்து அதை உங்கள் தலையை விடப் பெரிதாக காற்றுப் போகாமல் ஊதி அதன் வாயை நூலால் இறுகக் கட்டுங்கள்.

2. ஒரு காகிதத்தை எடுத்து 3 செ.மீ x 2 செ.மீ அளவு துண்டுகளாக வெட்டி வைத்துக் கொள்ளுங்கள்

3. பலூனின் அடியில் கொஞ்சம் இடம் விட்டு விட்டு காகிதத் துண்டு களை அதன் மீது ஒவ் வொன்றாக ஒட்டுங்கள். அத்துண்டுகளின் மீது மற்றும் ஒருமுறை காகிதத் துண்டுகளை ஒட்டுங்கள். அவை நன்கு உலர்ந்த பின் அவற்றின் மீது இன்னொரு முறை காகிதத் துண்டுகளை ஒட்டுங்கள்.

4. இந்தக் காகித அடுக்கு கள் நன்கு உலர்ந்த பின் பலூனின் காற்றை வெளிப்படுத்துங்கள். அதன் பின் காகித அடுக்குகளை மெதுவாக விரலை நுழைத்து எடுங்கள். இப்போது ஒரு முகமூடி கிடைக்கும். உங்கள் தலை நுழைய அதனைக் கத்தரியுங்கள்.

5. பிறகு கண்களுக்கும் மூக்கிற்கும் வேண்டிய ஓட்டைகள் செய்யுங்கள். இப்போது வண்ணம், மேக்கப் சாதனங்களைக் கொண்டு நீங்கள் விரும்பும் உருவத்தை அமைக்கலாம். சில மாதிரிகள் இங்கு கொடுக்கப்பட்டுள்ளன.



## மூன்று சுலப இழுப்புகளில் யானையின் படம் வரையுங்கள்.






துரியோதனன் பாண்டவர்கள் மீது பொறாமை கொண்டு மனம் நொந்து நாளுக்கு நாள் இளைத்துக் கொண்டே போகலானான். அது கண்டு சகுனி ''துரியோதனா! உன் மனக் குறை என்ன? ஏன் இப்படி இளைத்துக் கொண்டே போகிறாய்?'' என்று கேட்டான்.

துரியோதனனும் ''மாமா! இந்த தருமன் பீமனதும் அர்ஜுனனுதும் உதவி கொண்டு நாடுகளை வென்று ராஜசூய யாகம் செய்து சக்கரவர்த்தி என்ற பெயர் பெற்று விட்டான். பல மன்னர்கள் அவனுக்கு அடி பணிந்து போயினர். கிருஷ்ணர் நடு சபையில் சிசுபாலனைக் கொன்ற போது ஒருவன் கூட எதிர்த்துப் பேசவில்லை. மன்னர்கள் நவரத்தினங்களையும், தங்கம், வெள்ளி என்றெல்லாம் மலை மலையாக தருமனுக்குக் காணிக்கை செலுத்தினார்கள். இதையெல்லாம் பார்க்கப் பார்க்க எனக்கு என் மீதே வெறுப்பு ஏற்பட்டது. நாம் மயனின் மாளிகையைச் சுற்றிப் பார்த்தபோது எப்படி அவமானப்பட்டோம். இந்த என் மன வேதனையை என் தந்தையிடம் சொல்லுங்கள்'' என்றான்.

அதைக் கேட்ட சகுனி ''நீ ஏன் பாண்டவர்களின் செல்வத்தைக்கண்டு பொறாமைப்படுகிறாய்? அவர்கள் அதை நேர்வழியில்தானே அடைந்தார்கள்? அவர்களுக்கு தெய்வ பலம் அதிகமாகக்கிடைத்துள்ளது. அதனால் தான் நீ அவர்களைப் பல முறைகளில் அழிக்க முயன்றும் முடியாது போயிற்று. துரௌபதி அவர்களது

—சூதாட்ட வலை—



மனைவி ஆகி விட்டதால் துருபதனின் படை பலம் வேறு அவர்களுக்குச் சேர்ந்து விட்டது. கிருஷ்ணர் வேறு அவர்கள் பக்கம் இருக்கிறார். அவர் அவர்களது இளம் பிராயத்திலிருந்தே கண்ணை இமை காப்பது போலக் காத்து வருகிறார். காண்டவ வனத்தை எரித்து அக்கினி தேவனுக்கு உதவி அவனிடமிருந்து காண்டீபத்தையும் அட்சய அம்புராத் தூனியையும் அர்ஜுனன் அடைந்து விட்டான். அதனால்தான் தருமனால் பல மன்னர்களை வெல்ல முடிந்தது. காண்டவ வனம் காரணமாகத்தான் அவர்களுக்கு மயன் கட்டிக் கொடுத்த மாளிகை கிடைத்தது. இதெல்லாம் முறைப்படி நடந்ததே. ஆனால் நீ ஏன் உனக்கு யாருமே இல்லை என்று எண்ணிக் கவலைப்படுகிறாய்? உனக்கு பக்க பலமாக உன் தொண்ணூற்றொன்பது தம்பிகளும் துரோணரும், அசுவத்தாமனும், கர்ணனும், கிருபாச்சாரியாரும் நானும் இருக்க நீ ஏன் வீணாகக் கவலைப்படுகிறாய்?'' என்று கேட்டான்.

துரியோதனனும் ''அப்படியானால் நாம் இப்போதே படைகளுடன் போய்ப் பாண்டவர்களைத் தோற்கடித்து விட்டு மயனின் மாளிகையைப் பெயர்த்து எடுத்து ஹஸ்தினாபுரத்திற்குக் கொண்டு வந்து விடலாமா?'' என்று ஆவலுடன் கேட்டான். சகுனியும் ''துரியோதனா! பாண்டவர்களை வெல்வது எளிதல்ல. போரில்லாமல் அவர்களை வெல்ல ஒரு வழி இருக்கிறது. தருமனுக்கு சதுரங்கம் என்றால் மிகவும் பிடிக்கும். அவனைச் சதுரங்கம் விளையாட நீ கூப்பிடு அதில் அவனை நான் தோற்கடித்து அவனது நாடு, செல்வம் ஆகியவற்றை வென்று உனக்குக் கொடுக்கிறேன். ஆனால் இந்த சதுரங்க ஆட்டத்திற்கு நீதான் உன் தந்தையிடம் அனுமதி வாங்க வேண்டும்'' என்றான்.

அப்போதே சகுனி துரியோதனனை அழைத்துக் கொண்டு திருதராஷ்டிரனிடம் சென்றான். அப்போது திருதராஷ்டிரன் தருமர் செய்து முடித்த ராஜ சூய யாகம் பற்றி எண்ணி மகிழ்ந்து கொண்டிருந்தான். சகுனி திருதராஷ்டிரனிடம் ''நம் துரியோதனன் இளைத்து துரும்

பாகப் போய் விட்டான்'' எனவே திருதராஷ்டிரன் திடுக்கிட்டு துரியோதனனைத் தன்னருகே அழைத்து ''நீ மிகவும் இளைத்துப் போய் விட்டாயாமே. என்ன காரணம்?'' என்று கேட்டான்.

துரியோதனன் ''என் மனதைக் கவலைதான் அரிக்கிறது. உணவு செல்லவில்லை. உறக்கம் வரவில்லை. எனக்கு மகிழ்ச்சி எதனாலும் ஏற்படவில்லை. பாண்டவர்களின் வைபவத்தை என்னால் பார்த்துச் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. தருமனுக்குக்கிடைத்த செல்வம் வேறு எந்த மன்னனுக்கும் கிடைக்கவில்லை இதை நினைத்துக் கவலைப்பட்டால் நான் இளைத்துப் போகாமலா இருப்பேன்?'' என்றான்.

அப்போது சகுனி ''துரியோதனா! கவலைப்படாதே. நான் தருமருடன் சதுரங்கம் ஆடிப் பந்தயம் வைத்து அவனடைந்த செல்வத்தை எல்லாம் உனக்கு வாங்கிக் கொடுக்கிறேன். ஒரு மன்னன் மற்றொரு மன்னனைச் சதுரங்கம் விளையாடக் கூப்பிட்டால் அவன் வர முடியாது என்று சொல்லக் கூடாது. இது மன்னர்களின் மரபு. எனவே தருமனைச் சதுரங்கம் ஆட நாம் அழைப்போம்'' என்றார்.

அப்போது துரியோதனன் திருதராஷ்டிரனின் காலில் விழுந்து ''மாமா சொல்வது போல தருமனைச் சதுரங்கம் விளையாட இங்கு வர வழைத்து அந்த ஆட்டம் நடக்க அனுமதி அளியுங்கள்'' என்று வேண்டினான். திருதராஷ்டிரனும் ''இது பற்றி விதுரனிடம் கலந்து ஆலோசித்து விட்டு பதில் சொல்கிறேன்'' என்றார்.



துரியோதனனோ ''இதை விதுரரிடம் கூறினால் இதற்கு அவர் சம்மதிக்க மாட்டார். நீங்கள் இதற்குச் சம்மதிக்காவிட்டால் நான் உயிருடன் இருக்க மாட்டேன். அதன்பிறகு நீங்களும் விதுரருமே இந்த நாட்டை ஆண்டு வாருங்கள்'' எனவே திருதராஷ்டிரன் தன் மகன் மீது கொண்ட அபரிமித பாசத்தால் துரியோதனன் சொன்னதை ஏற்றுக் கொண்டான். அவன் உடனே தலை சிறந்த சிற்பியை அழைத்து மயன் கட்டிய அழகிய மண்டபம் போல ஒன்றை நிர்மாணிக்கும்படிக்



கட்டளை இட்டான்.

அதன் பிறகு அவன் விதுரரை அழைத்து அவரிடம் ''யுதிஷ்டிரனை சதுரங்கம் விளையாட அழைக்கப் போகிறேன்'' என்றான். விதுரரோ ''சதுரங்க விளையாட்டா? அதில் பந்தயம் வைத்து ஆடுவார்களே. இதனால் கடும் விரோத மனப்பான்மை ஏற்பட்டு விடுமே வேண்டாம் இந்த விளையாட்டு'' என்றார்.

திருதராஷ்டிரனும் ''இது சூதாட்டமாக மாறி பயங்கர விளைவை ஏற்படுத்தாது. நட்புறவுடன் விளையாடும் இந்த ஆட்டம் பீஷ்மர், துரோதணர், நான், நீ ஆகியோர் முன்னிலையில்தானே நடக்கும்? அப்போது எந்த விபரீதம் நேர்ந்தாலும் நாம் தடுத்து விடலாம்'' என்றான். விதுரரோ அது பற்றி பீஷ்மரின் யோசனையைக் கேட்பது என எண்ணி அவரைக் காணச் சென்றார்.

திருதராஷ்டிரன் கட்டளை இட்டபடி அழகிய மண்டபம் உருவாக்கப் பட்டது. திருதராஷ்டிரன் விதுரரை அழைத்து ''இதோ பார். சதுரங்கம் விளையாட மண்டபம் கூடத் தயாராகி விட்டது. நீ போய் தருமனை அழைத்து வா'' என்று கூறினான். வேறு வழி இல்லாமல் விதுரர் தருமனை அழைத்து வரக் கிளம்பிச் சென்றார். இந்திரப் பிரஸ்தத்தை அவர் அடையவே யுதிஷ்டிரரும் அவரைத் தக்க மரியாதைகளுடன் வரவேற்றார்.

பிறகு அவர் விதுரரிடம் ''உங்கள் முகம் வாட்டமுற்று இருக்கிறதே இதற்கு என்ன காரணம்? ஹஸ்தினாபுரத்தில் யாவரும் நலம்தானே?'' என்று கேட்டார். விதுரரும் ''தருமா! அங்கு யாவரும் நலமே. இங்கு மயன் நிர்மாணித்த மண்டபம் போல ஒரு மண்டபத்தை ஹஸ்தினாபுரத்திலும் உருவாக்கி இருக்கிறார்கள். நீயும் உன் சகோதரர்களும் அங்கு வந்து கொஞ்ச காலம் இருந்து துரியோதனனுடன் நட்பு முறையில் சதுரங்கம் ஆட வேண்டும். இது திருதராஷ்டிரனின் விருப்பம். இதை உன்னிடம் தெரிவித்து உன்னை அழைத்து வருமாறு திருதராஷ்டிரன் என்னை அனுப்பி இருக்கிறார்'' என்றார்.

அதைக் கேட்ட தருமர் ''பெரிய

வரா, சதுரங்க ஆட்டத்திற்கு அழைக்கிறார்? அதில் பந்தயம் வைக்க வேண்டி வரும். அப்போது அது சூதாட்டம் ஆகிவிடுமே. அதனால் வீண் சண்டை சச்சரவுகள் ஏற்படும். உங்கள் அபிப்பிராயம் என்ன? நீங்கள் என்ன சொன்னாலும் அதைச் செய்யத் தயாராக இருக்கிறேன்'' என்றார்.

விதுரரும் ''நான் இது சூதாட்டமே என்று எடுத்துக்கூறியும் திருதாஷ்டிரன் அதை ஏற்கவில்லையே! உன்னை அழைத்து வரும்படி எனக்குக் கட்டளை இட்டதன் பேரில்தான் நான் வந்திருக்கிறேன்'' நீயே இது பற்றி யோசித்து ஒரு முடிவுக்கு வா'' என்றார்.

தருமரும் ''பந்தயம் வைத்து சதுரங்கம் ஆடுவது சூதாட்டமே. ஆனாலும் பெரியவரே அழைத்திருப்பதால் அதைத் தட்டி கழிக்க முடியாது. எனவே இதன் விளைவு எப்படிப் பட்டதானாலும் நான் தங்களுடன் நாளை ஹஸ்தினாபுரத்திற்குப் புறப் படுகிறேன்'' என்றார். மறுநாள் தருமர் தன் நான்கு தம்பிகளையும் துரௌபதியையும் அழைத்துக் கொண்டு விதுரருடன் கிளம்பினார்.

ஹஸ்தினாபுரத்தை அவர்கள் அடைந்ததும் பீஷ்மரையும் துரோணரையும் திருதராஷ்டிரனையும் வணங்கினார்கள். துரௌபதி மகாராணி போல விளங்கி கம்பீரமாக நடந்து வந்தது துரியோதனனுக்கு மிகுந்த எரிச்சலை மூட்டியது.

மறுநாள் தருமர் தம் நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்து விட்டுப்





புதிதாகக் கட்டப்பட்ட மண்டபத்திற்குச் சென்றார். அங்கு சகுனி, துரியோதனன், துச்சாதனன் முதலானோர் அவரது வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தனர். சகுனி தருமரைக் கண்டதும் ''இந்திரப் பிரஸ்த மன்னா! உன்னைக்காண சிலரும், பொழுதைப் போக்க உன்னுடன் சதுரங்கம் ஆட வேறு சிலரும் வந்திருக்கிறார்கள். சதுரங்க ஆட்ட விதிகளை முன் கூட்டியே வகுத்துக் கொண்டு ஆட்டத்தை ஆரம்பிக்கலாமா?'' என்றான்.

தருமரும் ''சகுனி! சதுரங்க ஆட்டமே சூதாட்டம்தான். அதில் ஏமாற்று வேலைகளைச் செய்யக் கூடாது. அப்படிச் செய்வது ஒரு க்ஷத்திரியனுக்கு அழகல்ல. எனவே ஆட்டம் நியாயமாயும் நேர்மையாயும் நடக்க வேண்டும்'' என்றார். சகுனியும் ''சதுரங்க ஆட்டம் என்பது போர்களத்தில் போர் புரிவது போலத்தான். உனக்கு இஷ்டம் இருந்தால் சதுரங்கம் ஆட வா. இல்லாவிட்டால் ஆடாமல் பேசாமல் ஒதுங்கிப் போய் விடு'' என்றான்.

தருமரோ ''இல்லை, இல்லை. ஒரு மன்னன் மற்றொரு மன்னனைச் சதுரங்கம் ஆட அழைத்தால் ஆடச் செல்லவே வேண்டும். ஆடாமல் செல்வது தவறு. எனவே நான் ஆடத் தயார். எனக்கு எதிரில் அமர்ந்து விளையாடுபவர் யார்?'' என்று கேட்டார். துரியோதனனும் ''நான்தான். ஆனால் எனக்கு பதிலாக சகுனி ஆடுவார். அவர் எதைப் பந்தயமாகக் கூறினாலும் நான் அதைக் கொடுக்கத் தயார்'' என்றான்.

தருமரும் ''ஒரு மன்னனுக்கு பதிலாக இன்னொருவர் ஆடுவது-என்பதை இதுவரை நான் கேள்விப்பட்டதே இல்லை இது அதிசயமாக உள்ளது. ஆனாலும் இதற்கும் நான் சம்மதிக்கிறேன்'' என்றார். அவர்களது ஆட்டத்தைப் பார்க்க பீஷ்மர், துரோணர், திருதராஷ்டிரன், கிருபர், விதுரர் ஆகியோர் அமர்ந்திருந்தார்கள்.

ஆட்டம் ஆரம்பமாகியது முதலில் தருமர்தான் அணிந்திருந்த ரத்தின மாலையைப் பந்தயமாக வைத்தார். துரியோதனனும் தான் அணிந்திருந்த ரத்தின மாலையைக் கழற்றி வைத்தான். ஆட்டத்தில் தருமர் தோற்கவே

அவர் தன் மாலையை இழந்தார். இதன்பின் தருமர் பந்தயமாக வைத்த ஆபரணங்களை எல்லாம் ஒவ்வொன்றாக இழந்து கொண்டே வந்தார், அதன்பின் அவர் தன் யானை, குதிரை, ரதம் என்ற படைகளையும் பந்தயமாக வைத்து அவற்றையும் அவர் இழந்தார்.

இதைக் கண்ட விதுரர் திருதராஷ்டிரனிடம் ''நான் இப்போது எதைச் சொன்னாலும் நீ ஏற்க மாட்டாய். இந்தச் சூதாட்டத்தின் வாயிலாக நீ பாண்டவர்களின் செல்வத்தை எல்லாம் அபகரிக்கத் திட்டம் போட்டிருக்கிறாய். இதனால் உனக்குத்தான் பெரிய நஷ்டம் ஏற்படப் போகிறது. பிற்காலத்தில் நீங்கள் எல்லோரும் அழிந்து போவீர்கள். பாண்டவர்களின் ஆத்திரத்தைக் கிளற வேண்டாம்'' என்று சொன்னார்.

திருதராஷ்டிரனோ விதுரர் கூறியது பற்றிக் கவலைப்படவில்லை. துரியோதனனோ அவரை கண்டபடி வைதான். தருமரோ இதுவரை தம் செல்வத்தை எல்லாம் இழந்து விட்டார். நாட்டையும் இழந்த பின் அவரிடம் பந்தயமாக வைக்க வேறு எதுவும் இருக்கவில்லை. அப்போது அவர் தன் தம்பிகளை ஒவ்வொருவராகப் பந்தயமாக வைத்துத் தோற்று அவர்களையும் இழந்தார். பிறகு தன்னையே பந்தயமாக வைத்துத் தோற்றுப் போனார்.

அப்போது சகுனி ''தருமா! நீ உன்னிடத்திலிருந்த அனைத்துப் பொருள்களையும் உன் தம்பிகளையும் உன்னையும் இழந்து விட்டாய். இனி உன்னிடம் மிஞ்சி இருப்பது உன் மனைவி துரௌபதிதான். அவளைப் பந்தயமாக வை'' என்றான். தருமரும் துரௌபதியைப் பந்தயமாக வைத்து ஆடினார். இது கண்டு சபையில் பெருத்த சலசலப்பு ஏற்பட்டது. இனி கேடு காலம் ஆரம்பமாகி விட்டது எனச் சிலர் கூறினார்கள். பீஷ்மரும் துரோணரும் கிருபரும் எதுவுமே சொல்லாமலே இருந்தனர். விதுரர் பல்லைக் கடித்துக் கொண்டு தம் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டார். துரியோதனனோ மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தான்.



# மகா வேம்பு

அடர் பச்சை நிறத்தில் அகலமாயும் ஓரடி நீள இலைகளையும் நிறையக் கொண்டு தென்படும் மகாவேம்பு சாதாரண வேப்பமர வகையைச் சேர்ந்தது அல்ல. இதன் பெரிய இலைகள் சிறு சிறு இலைகளாகப் பிளந்து நுனியில் முட்டை வடிவில் இருக்கும்.

இதன் பூ ஊதா நிறத்தில் கொத்துக் கொத்தாக இருக்கும். குழாய்கள் போல இருந்து பார்க்க அழகாக இருக்கும். அதிலிருக்கும் தேனின் நறுமணம் யாவர் மனதையும் கவரும். வசந்தகாலத்தின் ஆரம்பத்தில் அதாவது மார்ச் ஏப்ரல் மாதங்களில் மொட்டையாக இருக்கும் கிளைகளில் இம்மலர்கள் தோன்ற ஆரம்பிக்கின்றன. அதன்பின் இலைகள் தோன்றுகின்றன. ஒருசில நாட்களில் மரம் முழுவதிலும் மலர்களும் இலைகளும் நிரம்பி விடுகின்றன. இதற்கு இரண்டு மூன்று மாதங்களுக்குப் பின் இம்மலர்கள் உதிர்ந்து விடுகின்றன.

இதன் காய்கள் உருண்டையாக இருக்கும். உள்ளே நாரும் நான்கு விதைகளும் இருக்கும். இதன் ஓடு கெட்டியானது. இதன் பழங்களை பறவைகள் மிகவும் விரும்பிச் சாப்பிடும். மனிதர்களுக்கு மட்டும் இவை விஷத்திற்குச் சமமாம். இதன் வித்துக்கள் மருந்திற்கு உபயோகப்படுகின்றன. முடக்குவாத மருந்திற்கு இது பெரிதும் பயன்படுகிறது. இவ்விதைகளை பாசிமணிபோலக் கோர்த்து மாலையாக அணிகிறார்கள்.

இம்மரம் 12லிருந்து 25 மீட்டர் உயரம் வளர்கிறது. அடர்த்தியாய் குடைபோல உள்ள இம்மரத்தை நிழலுக்காக வளர்க்கிறார்கள். இவை வெகு வேகமாக வளர்கின்றன.



நம் நாட்டு முனிவர்கள் - 10

# மஹிதாஸ் - கவசன்

விசாலர் என்ற ரிஷியிடம் பல சீடர்கள் கல்வி பயின்று வந்தார்கள். அவர்களில் அவரது மகனும் ஒருவன். ஒருநாள் விசாலர் தம் சீடர்களுக்கு யாக விதிகளைப் பற்றிக் கூறப் போகிறார் என்று அறிந்து அவரது மகனும் மற்ற சீடர்களோடு அவர் கூறப் போவதைக் கேட்கப் போனான். ஆனால் விசாலர் அவனிடம் வேறொரு வேலையைச் செய்யச் சொல்லி அனுப்பி விட்டார். -

தன் தந்தை இவ்வாறு செய்தது கண்டு ஆச்சரியப்பட்டு அவன் தன் தாயான ஐதரையிடம் போய் அது பற்றிச் சொல்லவே அவளும் சற்று யோசித்து ''உன் தந்தை பிராம்மணர். ஆனால் நான் குடியானவப் பெண். உன் தந்தை பிராம்மணர்களுக்கு மட்டுமே யாக விதிகளைக் கற்றுக் கொடுப்பார். அதனால் என்ன? நீ இன்று முதல் வாழ்விற்கே ஜீவாதாரமாக உள்ள பூமிதேவியை வழி பட்டு வா. எல்லாச் செல்வங்களையும் கல்வியையும் அ;ளிப்பவள் அவள். அவளை வழி பட்டால் நிறைய செல்வமும் நல்ல மனமும், நல்லறிவும் உனக்குக் கிடைக்கும்'' என்றாள்.

அவனும் அதற்குப்பின் பனிரெண்டு ஆண்டுகள் பூமாதேவியை வழிபட்டு வந்தான். விவசாயத்தை உன்னிப்பாக கவனித்து செய்து வரலானான். அவன் வளர்ந்து பெரியவனானதும் மஹிதாஸ் என்ற ரிஷியாகப் புகழ் பெற்றான். தாயின் காரணமாக அவனுக்கு ஐதரேயன் என்ற மற்றொரு பெயரும் ஏற்பட்டது இந்தப் பெயரில் ஐதரேய பிராம்மணம், ஐதரேய அரண்யகம், ஐதரேய உபநிஷதம் என்ற மூன்று நூல்களும் வெளியிட்டான். இவன் நூற்றுப் பதினாறு ஆண்டுகள் உயிர் வாழ்ந்தான். இவனது தாய் பிராம்மண குலத்தில் பிறக்காத போதிலும் இவனை எல்லோரும் பெரிதும் மதித்து வந்தனர்.

இவன் எழுதிய ஐதரேய பிராம்மணத்தில் கவசன் என்றொரு ரிஷியைப் பற்றிய குறிப்பு உள்ளது. கவசனின் தாயும் பிராம்மண குலத்தில் பிறந்தவள் அல்ல. சரஸ்வதி நதிக்கரையில் சில முனிவர்கள் யாகம் செய்து கொண்டிருந்த போது கவசன் அங்கே சென்றான். முனிவர்கள் அவனை விரட்டி விட்டார்கள்.

ஆனால் சரஸ்வதி நதி அவனருகே போய் அவனது பாதங்களைக் கழுவினாள். அதைக் கண்டு முனிவர்கள் மலைத்துப் போனார்கள். கவசனின் மேன்மையை உணர்ந்து அவர்கள் அவனிடம் மன்னிப்புக் கோரி மரியாதை செய்யலானார்கள்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. ஒரு நாட்டு மக்கள் ஒரு எரிமலையைக் கடவுளாக வழிபடுகிறார்கள்? அந்த நாடு எது? அந்த எரிமலையின் பெயர் என்ன?
2. விம்பிள்டன் டென்னில் போட்டியில் கலந்து கொண்ட முதலாவது இந்தியர் யார்?
3. நம் நாட்டில் கட்டப்பட்ட மிகப் பெரிய நீர் நிலை எது?
4. நகை செய்யத் தங்கத்தோடு சேர்க்கப்படும் உலோகம் எது?
6. 'வங்காளத்தின் துயரநதி' என்பத எது?
7. உலக நீதி மன்றத்தில் எவ்வளவு நீதிபதிகள் உள்ளனர்?
8. நம் தேச ராகேஷ் சர்மா விண் வெளியில் எப்போது பயணம் செய்தார்?
9. பாஹியான் நம் நாட்டிற்கு எப்போது வந்தார்?
10. முதன் முதலில் ஆசிய விளையாட்டுகள் எப்போது எங்கு நடந்தன? அதன் விளையாட்டு வீரர்கள் யார்?
11. மனித உடலில் எலும்புகள் எவ்வாறு உபயோகமாகின்றன?
12. தாஜ்மஹலைக் கட்டியவர் யார்? அதைக் கட்ட எவ்வளவு காலம் பிடித்தது?
13. மங்கோலியாவின் தலைநகர் எது?
14. வல்லபாய் படேலை 'சர்தார்' என்று ஏன் அழைக்கிறார்கள்?
15. உலகில் மிகப் பெரிய அளவில் தானிய வியாபாரம் எங்கு நடக்கிறது?
16. நம் நாட்டில் மிக உயரமான இடத்திலிருந்து விழும் நீர் விழுச்சி எது?

## விடைகள்

1. மௌண்ட் பூஜியாமா, ஜப்பான்.
2. சர்தார் நிஹால்சிங், 1908ல்.
3. நர்மதா சாகர்.
4. செம்பு.
5. 1492ல்.
6. தாமோதர் நதி.
7. பதினைந்து.
8. 1984 ஏப்ரல் 5ல்
9. கி.பி. 405 - 411க்குள்.
10. 1951, புதுடெல்லி, ஜப்பான்.
11. உடலுக்கு உருவம் கொடுத்து இதயம், மூளை காற்றுப் பைகள் போன்றவற்றைப் பாதுகாக்கின்றன.
12. முகலாய மன்னர் ஷாஜஹான், 22 ஆண்டுகள்.
13. உலாஸ் பேடார்
14. குஜராத்தில் பர்டோலியில் வரிகொடா இயக்கத்திற்குத் தலைமை தாங்கியதற்காக.
15. அமெரிக்காவின் சிகாகோவில்.
16 கர்நாடகாவிலுள்ள ஜோக் நீர்வீழ்ச்சி.



# கை கொடுத்த தெய்வம்

பேரூரில் பெரியசாமி ஒரு காலத்தில் பணக்காரராக இருந்தவர். தம் உதார குணத்தால் உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் மற்றும் வந்து கேட்டவர்களுக்கும் அவர் இல்லை எனாது பணத்தை வாரி வாரிக் கொடுத்ததால் விரைவில் ஏழையாகி விட்டார். அவரது மனைவியும் இறந்து விடவே அவர்தம் மகள் பூர்ணிமாவை வளர்க்கும் பொறுப்பையும் ஏற்க வேண்டியதாயிற்று.

பூர்ணிமாவுக்கும் விவாக வயது வந்து விட்டது. எனவே பெரியசாமி தன் மகளின் விவாகம் பற்றிக் கவலைப் படலானார். ஏனெனில் வரதட்சணை கொடுத்து கல்யாணம் செய்ய அவரிடம் போதிய பணம் இல்லை. அப்போது அவரது நண்பன் ரகுபதி ''நான் ஒரு இளைஞனைப் பார்த்து வைத்திருக்கிறேன். அவன் அரசாங்கத்தில் பணி புரிபவன், நம் பூர்ணிமாவுக்கு ஏற்றவன். அவனது பெற்றோருக்கு இது பற்றித் தெரிவித்தேன். அவர்களும் பெண்ணைப் பார்க்க வருவதாகச் சொல்லி இருக்கிறார்கள்'' என்றான்.

பெரியசாமியும் ''அவர்களுக்குக் குறைந்தது ஐயாயிரம் ரூபாயாவது வரதட்சணையாகக் கொடுத்து கல்யாணச் செலவையும் சமாளிக்க வேண்டுமே. இதற்கெல்லாம் பணத்திற்கு நான் எங்கே போவேன்?'' என்றார். ரகுபதியும் சற்று யோசித்து'' அதற்கும் எதாவது ஏற்பாடு செய்யலாம். பதினைந்து வருடங்களுக்கு முன் வியாபாரம் செய்வதாகக்கூறி நம் ஊரை விட்டுப் போன குப்புசாமியை நினைவிருக்கிறதா? அவன் உன்னிடம் பணம் கூடக் கடனாக வாங்கிக் கொண்டு போனானே. இப்போது அவன் கோவையில் பெரிய வியாபாரி. ஐந்தாறு கடைகள் வேறு அவனுக்குச் சொந்தம். மருதமலைக்

—எஸ். சோபினி—

கோவில் தர்மகர்த்தா. நான் அந்தக் கோவிலுக்குப் போனபோது அவனும் வந்திருந்தான். கோவில் சிப்பந்திகள் அவனுக்கு ஏகப்பட்ட மரியாதை செய்து வரவேற்றார்கள். அவன் கோவிலுக்கு ஏராளமாகப் பணம் கொடுத்திருக்கிறான். இந்த தர்மாத்மாவைக் கண்டு பேசலாம் என நினைக்கிறேன். அவனுக்கு நீ கொடுத்த கடனைப் பற்றி நினைவு படுத்தினால் என்ன?'' என்றான்.

பெரியசாமியும் ''ரகுபதி! குப்புசாமி நல்ல நிலையில் இருக்கிறான் என்பது கேட்டு மகிழ்ச்சி அடைகிறேன். அவனைப் போய்ப் பார்ப்பது அவ்வளவு நன்றாக இராது'' என்றார். ரகுபதியோ ''நீ அவனுக்குக் கடனைக் கொடுத்து விட்டு தயங்குகிறாயே. அவனோ உன் பணத்தால் பெரிய மனிதனாகியும் உன்னைப் பார்க்க வேண்டுமெ என்று கூட நினைக்கவில்லையே. நாம் போய் நினைவுப் படுத்திப் பணம் கேட்போம்'' என்றான்.

பெரியசாமியும் ''அது பற்றிப் பிறகு பார்க்கலாம். முதலில் அந்தப் பையனுக்கு நம் பெண்ணைப் பிடித்திருக்க வேண்டும் அதன் பிறகு அவனது பெற்றோர்கள் என்னென்ன எதிர்பார்க்கிறார்கள் என்று தெரிந்து கொள்ள வேண்டும்'' என்றார். ரகுபதியும் ''சரி, அவர்களைப் பெண் பார்க்க வரும்படிச் சொல்கிறேன்'' என்று கூறி விட்டுப் போனான்.



சில நாட்களுக்குப்பின் மருதாசலமும் அவன் மனைவியும், மகன் மாணிக்கமும் பூர்ணிமாவைப் பெண் பார்க்க வந்தார்கள். அவர்கள் எல்லோருக்கும் பெண்ணை மிகவும் பிடித்துப் போயிற்று.

மருதாசலம் ரகுபதியிடம் ''ரகுபதி! எங்களுக்குப் பெண் மிகவும் பிடித்து விட்டது. என் மகன் மாணிக்கத்திற்கு அரசாங்க வேலை நல்ல சம்பளமும் கிடைக்கிறது. அவனுக்கு முப்பதாயிரம் ரூபாய் வரதட்சணை கொடுப்பதாகக் கூறி இரண்டு, மூன்று சம்மந்தங்கள் வந்தன. ஆனால் எங்களுக்கு அந்தப் பெண்கள் பிடிக்கவில்லை. அதனால் வேண்டாம் என்று கூறி விட்டோம்'' என்றான்.



அவனைக் கண்டதும் மருதாசலம் மரியாதையாக எழுந்து நின்று பணிவுடன் வணங்கி ''சின்ன ஐயா! நீங்கள் எங்கே இங்கு வந்தீர்கள்?'' என்று கேட்டான். அந்த இளைஞனோ அதற்கு எவ்வித பதிலும் கூறாமல் பெரியசாமியின் அருகில் போய் நின்று அவரது கால்களில் விழுந்து வணங்கி ''மாமா! என்னைத் தெரியவில்லையா?'' என்று கேட்டான். பெரியசாமியும் திகைத்து சற்று யோசித்து ''தெரியவில்லையே. யார் வீட்டுப் பிள்ளை?'' என்று கேட்டார்.

அந்த இளைஞனும் ''தெரியவில்லையா மாமா! நான்தான் முருகையயன். உங்கள் பக்கத்து வீட்டிலிருந்த குப்புசாமியின் மூத்த மகன். நான் சிறுவனாக இருக்கும் போது என்னைத் தூக்கிக் கொஞ்சி விளையாடுவீர்களே! மறந்து விட்டீர்களா? அதே முருகையயன்தான் நான்'' என்றார்.

பெரியசாமியும் ஆச்சரியத்தோடு அவனைப் பார்த்து ''ஆ! அந்த முருகையயனா நீ! எப்படி வளர்ந்து விட்டாய்! உன்னையெல்லாம் பார்த்து எவ்வளவு வருடங்கள் ஆகிவிட்டன! உன் அப்பாவும் அம்மாவும் சௌக்கியமாக இருக்கிறார்களா?'' என்று கேட்டான்.

முருகையயனும் ''யாவரும் நலமே அது சரி, மருதாசலம்! நீங்கள் எப்படி இவரைத் தேடி வந்தீர்கள்? என்ன விஷயம்?'' என்று கேட்டான். மருதாசலமும் பூர்ணிமாவைச் சுட்டிக் காட்டி

ரகுபதியும் ''மருதாசலம்! பெரியசாமியின் நிலைமை பற்றி ஏற்கனவே சொல்லியிருக்கிறேன். இவரால் வரதட்சணையாக ஐயாயிரத்திற்கு மேல் கொடுக்க முடியாது'' என்றான். மருதாசலமோ ''பூ! ஐயாயிரமா? இதென்ன பிச்சைக்காசு! முடிவாகச் சொல்லி விடுகிறேன். என் மகனுக்கு வரதட்சணையாக இருபதாயிரம் கொடுக்க வேண்டும். இதில் ஒரு பைசா குறைந்தால் கூட சம்மதிக்க மாட்டேன்'' என்றான். அப்போது அந்த வீட்டு வாசலில் ஒரு அழகிய வில் வண்டி வந்து நின்றது. அதிலிருந்து ஒரு அழகிய இளைஞன் இறங்கினான். அவன் இருகைகளில் இரு பைகளை எடுத்துக் கொண்டு வீட்டிற்குள் வந்தான்.

''இந்தப் பெண்ணை என் மகனுக்குக் கல்யாணம் செய்து கொள்ளலாம் என்று வந்தேன். ஆனால் இந்த பெரிய சாமி நான் கேட்ட வரதட்சணை கொடுக்க முடியாது என்று கூறிவிட்டார். அதனால் இனிமேல் எனக்கு இங்கே என்ன வேலை? இதோ கிளம்பிக் கொண்டே இருக்கிறேன்'' என்றான்.



முருகையனும் ''சற்று நில்லுங்கள் மருதாசலம்! நான் இங்கே எதற்கு வந்தேன் என்று கேட்டீர்களல்லவா? சொல்கிறேன் கேளுங்கள். என் தகப்பனார் குப்புசாமி இவரது மகளைத் தன் வீட்டு மருமகளாக, அதாவது என் மனைவியாக ஆக்கிக் கொள்ள விரும்பினார். அதனால் என்னைப் பெண்ணைப் பார்த்து விட்டு வரும்படிச் சொல்லி அனுப்பினார். இப்போது நீங்கள் இந்தப் பெண் வேண்டாம் என்று கூறியது எனக்கு உதவி செய்தது போலாயிற்று. அதற்கு நான் நன்றி செலுத்துகிறேன்'' என்றான்.

அது கேட்டு மருதாசலம் பதில் பேச முடியாமல் முகத்தை தொங்கப்போட்டுக் கொண்டு தன் மனைவியையும் மகனையும் அழைத்துக் கொண்டு அவசர அவசரமாக அங்கிருந்து வெளியேறினான். அவர்கள் போனபின் முருகையன் பெரியசாமியிடம் ''நான் ஏதாவது தவறாக அவரிடம் கூறிவிட்டேனா? உங்கள் அபிப்பிராயம் தெரிந்து கொள்ளாமலேயே உங்கள் மகளை எங்கள் வீட்டு மருமகள், என் மனைவி என்றெல்லாம் ஏதேதோ கூறிவிட்டேனா? இருந்தாலும் நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விடுகிறேன்'' என்று கூறி மேலும் தொடர்ந்தான்.

''பதினைந்து வருடங்களுக்கு முன் வியாபாரம் செய்ய உங்களிடம் என் தந்தை கடன் வாங்கிக் கொண்டு போனாரா? அவரது வியாபாரம் நன்கு நடந்தது. ஒரு வருடத்தில் நல்ல லாபம் கிடைக்கவே உங்களுக்குக் கொடுக்க வேண்டிய பணதனைத் தனியாக எடுத்து வைத்தார். ஆனால் நீங்கள் உங்களிடமிருந்த பணத்தை எல்லாம் கேட்டவர்களுக்கு எல்லாம் தூக்கிக் கொடுத்து விட்டுக் கையில் காசில்லாமல் இருக்கும் நிலையை அறிந்தார்.

அதனால் அப்போது என் தந்தை வாங்கிய கடனை வட்டியோடு உங்களிடம் கொடுத்தால் அதையும் எல்லோருக்கும் கொடுத்து விடுவீர்கள் என எண்ணி அந்தத் தொகையை உங்கள் பெயரிலேயே வியாபாரத்தில் போட்டு உங்கள் கணக்கில் பணத்தைச் சேர்த்து வந்தார். இப்போது அந்தப் பணத்தைத்தான் இரு பைகளில் எடுத்து வந்திருக்கிறேன்''

இதைக் கூறி முருகைய்யன் சற்றுத் தயங்கவே பெரிய்சாமியும் ''ஏன் தயங்குகிறாய்? இன்னமும் சொல்ல வேண்டியதைச் சொல்லி விடு'' என்றார். முருகைய்யனும் நாணியவாறே ''மாமா! உங்களை என் தாயும் தந்தையும் எவ்வளவு உயர்வாக மதிக்கிறார்கள் என்று நான் சொல்லவும் வேண்டுமா? உங்கள் மகளைத் தம் மருமகளாக்கிக் கொள்ள வேண்டும் என்பதே அவர்களது விருப்பம். நானும் பெண் எனக்கும் பிடித்திருந்தால் மணந்து கொள்கிறேன் என்று சொல்லவே அவர்களும் என்னை இங்கு அனுப்பி வைத்தார்கள். எனக்கு உங்கள் மகளைப் பிடித்துப் போயிற்று. இனி முடிவு செய்ய வேண்டியது நீங்களே'' என்றான்.

அதைக் கேட்டு பெரியசாமியும் ரகுபதியும் பூர்ணிமாவைப் பார்க்கவே, அவளும் ''என் ஆருயிர்த் தந்தையின் அருமை நண்பர் கூறுவதைக் கட்டளையாக ஏற்கிறேன்'' என்றாள். பூர்ணிமா இவ்வாறு கூறியதும் பெரியசாமி மகிழ்ந்து போய் முருகைய்யனைக் கட்டித் தழுவிக் கொண்டு ''முருகைய்யா! உண்மையான நண்பன் கடவுளுக்குச் சமம். உன் தந்தை இதை நிரூபித்து விட்டார்'' என்றார்.

ரகுபதியும் சிரித்தவாறே ''ஆம் உண்மையான நட்பு எது என்று உன் தந்தை காட்டி விட்டார். உலகில் பணத்தை விட உண்மையான நட்பே உயர்ந்தது. இதைக் கொடுத்த கடவுளைக் கைகொடுத்த தெய்வம் என்று தானே கூற வேண்டும்'' என்று சொல்லி ஆனந்தக் கண்ணீர் வடித்தான்.





# நுழைவாசலின் தரம்!

ஒரு ஊரில் நாகப்பன் என்றும் ஏகப்பன் என்றும் இரு நண்பர்கள் இருந்தார்கள். அவர்கள் பெரியவர்களானதும் வெவ்வேறு தொழில்களில் இறங்கினார்கள். நாகப்பன் தன் சொந்த ஊரிலேயே தன் வயலில் விவசாயம் செய்து வந்தான். ஏகப்பன் வியாபாரம் செய்யப் பட்டணத்திற்குப் போனான். நாகப்பன் நன்கு உழைத்து சில வயல்களை வாங்கியதோடு தான் வசித்த சிறு வீட்டையும் பெரியதாகக் கட்டிக் கொண்டான். நல்லதொரு பெண்ணையும் அவன் மணந்து கொண்டு சுகமாக அவன் தன் வாழ் நாட்களைக் கழித்து வரலானான்.

வியாபாரம் செய்யப் பட்டணம் போன ஏகப்பனும் தன் தொழிலில் நல்ல முன்னேற்றம் கண்டான். பத்து வருடங்களுக்குப் பின் அவன் தன் ஊருக்கு வந்து தன் நண்பன் நாகப்பனைச் சந்திக்க அவனது வீட்டிற்குச் சென்றான். அவனது வீடு மாறி இருந்தது. அதனால் சற்று திகைத்தாலும் அதன் எதிரே இருந்த புளிய மரத்தால் அவன் அதுதான் நாகப்பனின் வீடாக் இருக்கும் என்று தெரிந்து கொண்டான்.

நாகப்பன் வசதியாக வாழ்கிறான் எனக் கண்டு ஏகப்பன் மகிழ்ந்தவாறே அந்த வீட்டு வாசலில் அடி எடுத்து வைத்தான். அப்போது மூலையிலிருந்த ஒரு நாய் குரைத்துக் கொண்டு அவனை நோக்கி ஓடி வந்தது. நாய் குரைப்பது கேட்டு நாகப்பனின் மனைவி வள்ளியம்மை கதவைத் திறந்து அதனருகேயே நின்று கொண்டு நாயை தன்னருகே அழைத்துக் கொண்டு ஏகப்பனை நீங்கள் யார் என்று கேட்பது போலப் பார்த்தாள்.

ஏகப்பனும் ''இது நாகப்பனின் வீடுதானே?'' என்று கேட்க வள்ளியம்மையும் 'ஆம்' என்பது போலத்

—சங்கர சுவாமி—

தலையை ஆட்டினாள். ஏகப்பனும் ''அவர்வீட்டில்இருக்கிறாரா?''என்று கேட்கஅவளும்''இல்லை''என்றாள். ஏகப்பன்''எங்கேபோயிருக்கிறார்?'' என்று கேட்க அவளும் 'தெரியாது' என்று சற்றுக் கடுப்புடன் கூறினாள்.

ஏகப்பனும் ''நானும் நாகப்பனும் இளம் வயது முதல் நண்பர்கள். பத்து வருடங்களுக்கு முன் வியாபாரம் செய்ய நான் இந்த ஊரை விட்டுப் பட்டணத்திற்குப் போய் விட்டேன். இப்போது அவனைப் பார்த்து விட்டுப் போகலாமென்று வந்தேன்'' என்றான். வள்ளியம்மை அது கேட்டு ஒன்றும் சொல்லவில்லை. வீட்டிற் குள்வரும்படி அழைக்கவும் இல்லை.

ஏகப்பன் கடும் வெயிலில் வந்த தால்களைத்துப்போயிருந்தான். முகத்தில் வியர்வைத் துளிகள் மின்னின. ஆயினும் அவன் ''நீங்கள் நாகப்பனுக்கு என்ன உறவு?'' என்று கேட்டான். அவளும் தான் அவனது மனைவி என்று கூறினாள். ஏகப்பனும் ''ரொம்பசந்தோஷம். ஒரேவெயிலாக இருக்கிறது. கொஞ்சம் குடிக்கத் தண்ணீர் கொடுக்கிறீர்களா?'' என்று கேட்டான்.

வள்ளியம்மை உள்ளே போய் ஒரு அலுமினியக் குவளையில் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள். அதில் குப்பை விழுந்தும் சற்று சூடாகவும் இருந்தது. ஏகப்பன் அதைக் கீழே கொட்டி விட்டுக் குவளையை அவளிடம்கொடுத்து விட்டு ''அம்மணீ! நான் இப்போதே போக வேண்டும் நாகப்பனைப் பார்க்க முடியாதது வருத்த



மாக இருக்கிறது. அவன் வந்தால் நான் வந்து போனதாகச் சொல்லுங்கள். அவன் இப்படி வீடு கட்டிக் கொண்டு வசதியாக வாழ்வது எனக்கு சந்தோஷ மாக இருக்கிறது என்று சொல்லுங்கள். ஆனால் இந்த வீட்டு நுழை வாசல் மட்டும் சரியாக இல்லை என்று நான் சொன்னதாகக் கூறுங்கள். ஏனென் றால் நான் மர வேலை செய்பவன். எனக்கு தலைவாசல் பற்றி எல்லாம் நன்கு தெரியும்'' என்று கூறி விட்டுச் சென்றான்.

அன்றிரவு வெகு நேரம் கழித்துத் தான் நாகப்பன் தன் வேலைகளை முடித்து விட்டு வந்தான். ஏகப்பன் தன்னைக் காண வீடு தேடி வந்தான் என்பது தெரிந்ததும் அவன் ''அடாடா! அந்த சமயத்தில் நான் இங்கே இல்லா மல் போனேனே. நீயாவது அவனைப் போகவிடாமல் இங்கே இருக்கச் சொல்லி இருக்கலாமே. அது சரி, அவன் எதாவது சொல்லி விட்டுப் போனானா?'' என்று கேட்டான்.

வள்ளியம்மையும் ''நீங்கள் இப் படி முன்னுக்கு வந்தது பற்றி சந்தோ ஷப்படுவதாகச் சொல்லச் சொன்னார். வீடு நன்றாக இருக்கிறது என்றும் நுழையும் தலை வாசல்தான் சரியாக இல்லை என்றும் சொல்லச் சொன் னார். அவர் மரவேலை செய்பவராம். அதனால்தான் வாசல் சரி இல்லை என்று சொல்லச் சொன்னார்'' என் றாள். நாகப்பனும் ஆச்சரியப்பட்ட வாறே தன் வீட்டுத் நுழை வாசலை வெகு நேரம் உற்றுப் பார்த்தான். ஆனால் அதில் எந்தக் குறையும் இருப்





பதாக அவனுக்குத் தெரியவில்லை.

ஓராண்டு காலம் கழிந்தது. மறுபடியும் கோடை காலம் வந்தது ஏகப்பனுக்கு அப்போதும தன் ஊருக்கு வர வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. அம்முறையும் நாகப்பனைக் காண ஏகப்பன் அவன் வீட்டிற்கு வந்தான். வீட்டின் வெளியே நின்றவாறே அவன் ''நாகப்பா!'' என்று கூப்பிட்டான். நாகப்பனின் மனைவி வள்ளியம்மை தான் கதவைத் திறந்து கொண்டு வந்தாள்.

இம்முறை அவள் ஏகப்பனைப் பார்த்ததுமே ''வாருங்கள், உள்ளே வாருங்கள்'' என்றாள். ஏகப்பனும் ''வேண்டாம் அம்மா! இந்த மர நிழலில் சற்று நேரம் இருந்து விட்டுப் போகிறேன்'' என்றான்.

வள்ளியம்மையும் ''நீங்கள் ஏன் மரத்தடியில் போய் இருக்க வேண்டும்? எங்கள் வீடு இருக்கிறதே உள்ளே வாருங்கள்'' எனவே ஏகப்பனும் ''சரி, வருகிறேன்'' என்று கூறி வீட்டினுள் சென்றான். வீட்டில் வெயில் தெரியவில்லை. 'குளு குளு'வென்று இருந்தது. வள்ளியம்மை அவனை மெத்தை போட்ட ஆசனத்தில் உட்காரச் சொன்னாள். ஏகப்பனும் ''இந்தத் தடவையாவது நாகப்பனைச் சந்திக்கலாம் என்று எண்ணி வந்தேன். ஆனால் எனக்குத்தான் அந்த அதிர்ஷ்டம் இல்லை போலிருக்கிறது'' என்றான்.

வள்ளியம்மை உள்ளேபோய் ஒரு தட்டில் மூன்று டம்ளர்களில் பானையில் வைத்திருந்த குளிர்ந்த நீரும், நீர்மோரும், இளநீரும் நிரப்பி எடுத்து வந்து ஏகப்பனின் முன் வைத்தாள். பிறகு அவள் ''முதலில் இவற்றைக் குடித்து தாகம் தீர்த்துக் கொள்ளுங்கள். பிறகு சற்று நேரம் கழித்து மதிய உணவு சாப்பிடலாம் அதற்குள் வந்து விடுவார்'' என்றாள். ஏகப்பனும் வள்ளியம்மை எவ்வளவு மாறி விட்டாள் என்று எண்ணினான்.

கொஞ்ச நேரமானதும் அவள் ஏகப்பனிடம் ''உச்சி வேளை தாண்டி விட்டது. நீங்கள் சாப்பிட வாருங்கள். அவருக்காக நீங்கள் காத்திருக்க வேண்டாம்'' என்றாள். அப்போது ஏகப்பனுக்குப் நல்ல பசியாகத்தான் இருந்தது.

அவனும் எழுந்து கை கால் அலம்பிக் கொண்டு சாப்பிட உட்கார்ந்தான் உணவு நேர்த்தியாகவும் ருசியாகவும் இருந்தது. சாப்பிட்டபின் இளைப்பாறப் படுத்த அவன் கண்ணயர்ந்து வெகு நேரம் வரை தூங்கி விட்டான். மாலையில்தான் கண் விழித்தான். அப்போதும் நாகப்பன் வந்திருக்கவில்லை. ஏகப்பனும் ''நான் போய் வருகிறேன். நாகப்பன் இம்முறையும் காண முடியவில்லை. இந்த வீட்டையும் இதைச் சுற்றியுள்ள தோட்டத்தையும் பார்க்க ஒரே சந்தோஷமாக இருக்கிறது என்று அவனிடம் சொல். நுழை வாசல் பற்றி நான் நன்கு அறிவேன். ஏனென்றால் மரவேலை செய்பவன் நான். இந்த நிலை வாசல் மிக நன்றாகவே இருக்கிறது'' என்று கூறிவிட்டு விடைபெற்றுக்கொண்டு சென்றான்.

அன்றிரவு நாகப்பன் வெகு நேரம் கழிந்த பிறகே வீட்டிற்கு வந்தான். வள்ளியம்மை அவனிடம் அன்று ஏகப்பன் வந்திருந்ததைக்கூறி அவன் சொன்னதை எல்லாம் நாகப்பனிடம் சொன்னாள். அதைக் கேட்ட நாகப்பன் ''ஏகப்பன் மிகவும் நேர்மையானவன் நல்ல நண்பன். புத்திசாலி என்று கூறினான். அப்போது வள்ளியம்மை '' அவர் போன தடவை வந்த போது நம் வீட்டு நுழை வாசல் சரியில்லை என்றாரே. இம்முறை மிக நன்றாக இருக்கிறது என்று சொன்னாரே. இதுதான் எனக்குப் புரியவில்லை'' என்றாள்.

நாகப்பனும் ''முதலில் இது எனக்கும் புரியாமல்தான் இருந்தது. ஆனால் இப்போது புரிந்து விட்டது. அவன் ஏன் அவ்வாறு சொன்னான் தெரியுமா? சென்ற முறை அவன் வந்தபோது நீ அவனுக்குச் சரியான வரவேற்பு அளிக்கவில்லை போலிருக்கிறது. அதனால்தான் நம் வீட்டு நுழைவாசல் சரி இல்லை என்று கூறினான். இம்முறை அவனை வரவேற்று நன்கு உபசரித்தாய் போலிருக்கிறது. அதனால்தான் நுழைவாசல் மிக நன்றாக இருக்கிறது என்று கூறி விட்டுச் சென்றான்'' என்றான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1996 ஆகஸ்டு மாத இதழில் வெளியிடப்படும்.



S.G. SESHAGIRI



S.G. SESHAGIRI

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜூன் 20–ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

---

## ஏப்ரல் மாதப் போட்டி முடிவு

| | |
|---|---|
| முதலாவது போட்டோ | : **காலத்தால் அழியாது கலை.** |
| இரண்டாவது போட்டோ | : **காலத்திற்கு கிடையாது விலை.** |
| பரிசு பெற்றவர் | : **திரு. இ. புகழேந்தி, ரெட்டிப்பட்டி, சேலம் மாவட்டம்.** |




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**


---

# Let's make the world a sweeter place to live in.



I'm planting a Tulsi tree. Hope it grows into a B-I-I-G one.



Lovable, blind Chacha Kunwar. He's been my parents' guide. The least I can do is help him cross safely.



Aha! This time Dad's got the flu and Mum's told me to give him a dose of medicine.



Gangu Bai has coolly taken the day off. Leaving Radha Mausi and me in a soapy mess.



Before that rich glutton of a Raju snatches my Kaju Barfi, let me give it to poor Smita.



Naughty Timmy has got himself hurt. Now this lil' Doc will set him right.



I'm helping Uncle Rajeev with the car repairs. Though Mum said "I'll be a spanner in the works".



With Chandra, my maths teacher, numbers are fun. Time I gave her a dozen smiling roses.




Ravalgaon™

Years and years of sweet success

AMBULIMAMA (Tamil) June 1996 Regd. No. M. 4863